Price Rs. 12/-
Bi-Annual Rs. 250/-




# SHRI VIDYA
# श्रीविद्या
# ஶ்ரீவித்யா

ஶகடபுரம் ஶ்ரீவித்யா பீடாதீஸ்வரரின் பரிபூர்ண அனுக்ரஹத்துடன் வெளிவரும் மாத இதழ்


VOL.8
ISSUE NO.4

APRIL 2015
ஸ்ரீமன்மத - சித்திரை






ஜகத்குரு

ஸ்ரீ பதரி சங்கராச்சார்ய சமஸ்தானம்

ஸ்ரீ க்ஷேத்ர சகடபுர ஸ்ரீவித்யா பீடாதீஸ்வரரின் பரிபூரண அனுக்கிரகத்துடன் வெளிவரும்

"ஸ்ரீவித்யா" மாத இதழ்

10-ஆம் ஆண்டு பூர்த்தி விழா

நாள் : 5-4-2015 ஞாயிற்றுக்கிழமை
இடம் : கிழக்குத் தாம்பரம்.





# ‘ஸ்ரீவித்யா’வின் 10-ஆண்டு நிறைவு விழா
## தாம்பரம் கிளை ஸ்ரீமடம்
## 05.04.2015









# ஸ்ரீவித்யா

ஆன்மீக மாத இதழ்



भक्तिमुक्तिविचाराढ्या भक्तचेतः प्रसाधनी ।
प्रबोधयन्ती जनतां श्रीविद्या वर्धतां चिरम् ।।

ப⁴க்திமுக்திவிசாராட்⁴யா ப⁴க்தசேத: ப்ரஸாத⁴னீ ।
ப்ரபோ³த⁴யந்தீ ஜனதாம் ஸ்ரீவித்³யாவர்த⁴தாம் சிரம் ।।

VOLUME - 8

APRIL 2015

120

ESTD. 2005

FOUNDER : ஸ்ரீவித்யா பீடாதீஶ்வர
ஸ்ரீ ஜகத்குரு பதரி ஶங்கராசார்ய ஸ்வாமிகள்
ஸ்ரீவித்யாபீடம், ஸ்ரீக்ஷேத்ர ஶகடபுரம்

ADMINISTRATOR : ஸ்ரீ M. சந்த்ரமௌலீஶ்வரன்,
ஸ்ரீகார்யம், ஶகடபுரம் - ஸ்ரீவித்யாபீடம்

PATRON : தர்மசிந்தாமணி - வேதமார்க ரக்ஷகர்
ஸ்ரீ G.K. ராமமூர்த்தி ஐயர், மும்பை

PUBLISHER : ஸ்ரீ N. கிருஷ்ணா

EDITOR : இலக்கிய மேகம் ஸ்ரீ ந. ஸ்ரீனிவாசன்

SUB - EDITOR : ஸ்ரீ M.K. முரளீதரன்




## ஸ்ரீவித்யா SUBSCRIPTION

2 Years : Rs.250/- 3 Years : Rs. 350/-

5 Years : Rs. 500/- Lifetime : Rs. 5,000/-

Cheques to be drawn in favour of "Shrividya Prakashanam Trust"


இதழ் வடிவமைப்பாளர் : ஸ்ரீ B. கணபதி ஸுப்ரஹ்மண்யன்

இதழில் வெளியாகும் கருத்துக்கள் கட்டுரை எழுத்தாளரின் சொந்த அபிப்ராயம்



Office for Communication : Valgen, No.1, Second Street, Jagadambal Colony
Royapettah, Chennai - 600 014. Ph : 044 - 42036767 Fax : 044-42036766

# மலரின் உள்ளே . . .

# ஸ்ரீவித்யாம்ருதம்

ஸ்ரீஸ்ரீ ஆசார்ய மஹாஸ்வாமிகளின் அருளுரை



சென்ற இதழ் தொடர்ச்சி

பகவான் இருந்தான்னு சொன்னா அவனுடைய கர்தவ்யம் என்ன தெரியுமா? பகவான் பகவத்கீதக்குள்ள உறுதியா சொல்லியிருக்கான்:

**अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ।।६।।**

**तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।**
**भवामि न चिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ।।७।।**

**அனன்யேனைவ யோகே³ன மாம் த்³யாயந்த உபாஸதே ।**

**தேஷாம் அஹம் ஸமுத்³த⁴ர்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாக³ராத் ।**
**ப⁴வாமி நசிராத்பார்த்த² மய்யாவேஶித சேதஸாம் ।।** (12.6-7)

எப்போதும் என்னோட த்யானமே பண்ணிண்டு இருக்கற பக்தர்கள் இருக்காளே, அவர்களை நான் இந்த ம்ருத்யு ஸம்ஸாரத்துலேர்ந்து தூக்கிண்டு அவர்களை நல்ல இடத்துக்கு சேத்துவேன். இது என்னுடைய கர்தவ்யம் என்று பகவான் சொன்னான்.

பகவான் எங்கேயோ தள்ளி இருக்கான் என்று நினைக்கலாம். பகவானுக்கு எப்படி இருக்கிறது கைங்கர்யம் பண்ற பரிவாரம் என்று கேட்டா, கோடி கோடி தேவதைகள் பகவானுடைய கைங்கர்யம் பண்ணிண்டே இருப்பா. ஆனா பகவான் சொல்றார் என்னை யார் த்யானம் பண்றாளோ அவரை காப்பாத்தறதுக்கு நாந்தான் வந்துடுவேன் என்று. ஏன் பகவானே இங்கே வந்துடுவார்? அவருடைய யாராவது ஸேவகரை அனுப்ப முடியாதா? இல்லை, ஸேவகரே வந்து காப்பாத்தினாலும் ஜனங்கள் சும்மா சும்மா பகவான் வருவார், பகவான்தான் காப்பாத்துவார் என்று

ஜனங்கள் தடுத்திருப்பாரோ என்று ராஜாவுக்கு ஸந்தேஹம் மறுபடியும் வந்தது.

அவன் அரண்மனைக்கு குரு ஒரு முறை உபதேஶம் பண்ண வந்தபோது, உபன்யாஸம் முடிந்த பிறகு கேட்டுட்டார். 'குருநாதா, நீங்கள், பகவான் ம்ருத்யு ஸம்ஸாரத்துலேர்ந்து காப்பாத்துவான், தானே வந்து எல்லாம் பண்ணுவான், பகவத் பக்தியில் நாம் எல்லாரும் த்ரிடமா இருக்கணும் என்று உபதேஶம் பண்ணினேள். ஆனா எனக்கு ஸந்தேஹம் இப்படி இருக்கறது. கோடி கோடி தேவதாள் ஸேவகர் இருக்கும்போது யாரோ ஒருவரை பகவான் அனுப்புவானா, இல்லை பகவானே ஸ்வயம் வருவானா?'

'இல்லை, பகவான் தான் வருவான்'.

'அது எப்படி முடியும்?' இப்படி பேசிண்டு போயிண்டே இருந்தான். அப்போ, அரண்மனைக்குள்ள இருக்கும் குளத்துக்குள்ள ராஜாவோட குழந்தை விழுந்துட்டான். உடனே ராஜா தானே அந்த குளத்துக்குள்ள குதித்து குழந்தையைக் காப்பாத்தி தூக்கிண்டு வந்தான். ஸேவகர்கிட்ட குடுத்து உள்ளே தூக்கிண்டு போக சொன்னான்.

குரு இதைப் பார்த்து சொன்னார் 'ஏய் மகாராஜா, இப்போதானே கேள்வி கேட்டுண்டு இருந்தாய். பாரு. எத்தனை பேரு சேவகா எல்லாம் இருக்கிறார்! அவா வந்து காப்பாத்தி இருக்கலாம் இல்லையா? நீ சும்மா இருந்திருக்கலாம் இல்லையா? அவாளும் ஓடி வந்துண்டிருந்தா இல்லையா? ஏன் நீயே போய் குதிச்சு அந்த குழந்தையை தூக்கிண்டு வந்தே? உனக்கு 'என்னுடைய பையன்' என்று ப்ரேமம், ப்ரியம் இருக்கோல்லியோ, அந்த ப்ரியத்துனால தாங்க முடியாம உடனே தூக்கிண்டு வந்தியோல்லியோ, அதே மாதிரி பகவான் -

**நமஜ்ஜனம் மஜ்ஜன இத்யதோ[4]க்ஷஜ:**

பகவான் யார் தன்னை உபாஸிக்கராளோ அவன் என்னுடைய ஆள் என்று நினைக்கரானாம். அவனுக்கு ஏதாவது கஷ்டம் வந்ததுன்னு சொன்னா, அவனைக் காப்பாத்தணும்னு அவன் தானே ப்ரியத்தோடு ஓடி வரானாம். அதனாலே பகவான் தானே வரேன் என்று பகவத் கீதைக்குள்ளே சொல்லி இருக்கான். தன்னை உபாஸிக்கறவர் மேல பகவானுக்கு அவ்வளவு ப்ரியம் இருக்கு.

பகவான் இருக்கிறான், பகவான் அனுக்ரஹம் பண்ணுவான் என்று த்ரிடமானதுக்கப்புறம் வேதாந்த உபதேஶங்கள் மூலமாக பகவானுடைய பெருமை தெரிஞ்சதுக்கப்புரம், இந்த பகவானுடைய சிந்தனையில் ஈடுபாடு யாருக்கு வரும் என்று நாங்கள் புரிஞ்சிக்கணும். பகவான் கீதோபதேசம் பண்ணும்போது சொல்லிருக்கான்

**சதுர்விதா[4] ப[4]ஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதினோ அர்ஜுன**

பகவான் சொல்றான் 'அர்ஜுன, நாலு விதமான ஜனங்கள் என்னை உபாஸிக்கிறார்கள். யாரு?

**ஆர்த்தோ ஜிக்[3]ஞாஸு: அர்த்தா[2]ர்த்தீ[4] ஞானீ** (7.16)

அர்ஜுன, ஆர்த்தர் - கஷ்டத்தில் இருக்கிறவர், ஜிக்ஞாஸு - தத்துவம் புரிஞ்சிக்கணும்னு விரும்பறவர், அர்த்தார்த்தீ - பணம் வேண்டுமென்று சொல்றவர் - அவர்தான் ஜாஸ்தி உபாஸிக்கிறார், ஞானீ - இந்த நாலு பேரும் என்னை உபாஸிக்கிறார்' என்றார்.



> "பகவான் யார் தன்னை உபாஸிக்கராளோ அவன் என்னுடைய ஆள் என்று நினைக்கரானாம். அவனுக்கு ஏதாவது கஷ்டம் வந்ததுன்னு சொன்னா, அவனைக் காப்பாத்தணும்னு அவன் தானே ப்ரியத்தோடு ஓடி வரானாம்."

நாலு பேரு உபாஸிக்கிறவர் இருந்தா, நாலு பேரிலே வசதியானவர் யாரு? ஆர்த்தர், ஜிக்ஞாஸிகள், இல்லை பணம் வேண்டு மென்று விரும்பறவரோ, இல்லை ஞானிகளோ?

இவா எல்லாரும் ரொம்ப ப்ரியமானவருன்னு சொல்லிருக்கான்.

**உதாரா: ஸர்வ ஏவைதே** - இவா எல்லாரும் எனக்கு ரொம்ப வேண்டியவருன்னு சொல்லிருக்கான்.

ஆனா, என்னன்னு கேட்டா,

**ஞானீ து ஆத்மைவ மே மதம்** - நாலு பேருல ஞானீ என்னுடைய ஆத்மா. அவா எல்லாரும் ரொம்ப புண்யசாலின்னு ஏன் சொல்லிருக்கான்? அவன் பணம் வேணுமென்றே இருக்கலாம்; வேற ஆசை, அது வேணும், இது வேணுமென்றே எண்ணம் வெச்சுண்டு இருக்கலாம்; ஆனாலும் அந்த எண்ணத்துனால என்னை ஸேவிக்கரானோல்லியோ, அதனால அவனும் புண்யசாலின்னு சொல்லி இருக்கார்.

இதுல ஞானீ என்னோட ஆத்மான்னு பகவான் விஶேஷமா சொன்னான். இப்போ ஞானிகள் எல்லாம் எப்படி இருக்கார்? அதைப்பத்தி சொல்வார்,

**பா³லோன்மத்த பிஶாசவத்**

பாலன் மாதிரி, உன்மத்தன் மாதிரி, பிஶாச மாதிரி இருப்பார் என்று. மஹான்கள், ஞானிகள் ஸாதாரணமா இருக்க முடியாதா? ஏன் குழந்தை மாதிரி இருக்கணும்? ஏன் பைத்தியக்காரன் மாதிரி இருக்கணும்? ஏன் பிசாசு மாதிரி எல்லாம் இருக்கணும்? இதெல்லாம் பக்தர்களுக்கு அருள் பண்றத்துக்கான்னு கேட்டா, பக்த ஜனங்களை அனுக்ரஹம் பண்றதுக்கேன்றே அவர்கள் அந்த ஸ்வபாவத்துடன் இருப்பார். நீங்க பாலர்களை பாருங்கோ - அது ஸ்வபாவமா எப்படி இருக்கும்? ரொம்ப விஷமத்தனம் இருந்தாலும், மனசுக்குள்ள கல்மஷம் இல்லாம இருக்கும். அந்த குழந்தைகள் மாதிரி ஞானிகள் இருப்பார்.

இப்போ நீங்க குழந்தைகளைப் பாருங்கோ எப்படி இருப்பான்னு. தினமும் ஒரு அம்மா தன்னோட அஞ்சு வயசு குழந்தைக்கு dress பண்ணி ஸ்கூலுக்கு அனுப்பிண்டு இருப்பாள். டப்பாவில சாப்பாடு எல்லாம் பண்ணி, குழந்தைக்கு பசிக்கக்கூடாதுன்னு கொடுத்து அனுப்பிண்டிருந்தாள். ஒரு நாள் பூரி, கறி எல்லாம் பண்ணி டப்பால போட்டு அனுப்பினாள். அங்க போனா அந்த டீச்சர் அன்னிக்கி சாப்பிட்டு வரவே இல்லை. குழந்தைகளோட டப்பா எல்லாம் பார்த்தா. இந்த டப்பால பூரி, கறி எல்லாம் இருந்தது. யாரும் இல்லாதபோது எடுத்து சாப்பிட்டுட்டா! இந்த குழந்தை சும்மா உக்காந்து பாத்துண்டே இருந்தது. அவள் கவனிக்கவே இல்லை. குழந்தை பார்த்தா, டப்பால ஒன்னும் இல்லை. 'நான் உன்னை அடிக்க மாட்டேன். நான்

சாப்பிட்டதை சொல்லாதே. வீட்டுக்குப் போய் அம்மாகிட்டயும் சொல்லக்கூடாது'. 'சரி, நான் சொல்ல மாட்டேன்'. 'அம்மா, நான் பூரி குடுத்ததை நீ சாப்பிட்டயான்னு கேட்டா, நீ என்ன சொல்லப்போறே?' 'அந்த ஸ்கூலில ஒரு நாய் இருந்தது, சாப்பிட்டதுன்னு சொல்றேன்'! டீச்சர் சாப்பிட்டதை சொல்லக்கூடாது, பின்ன, என்ன சொல்றது? பால ஸ்வபாவம்னா, இப்படி கல்மஷமே இல்லாம இருக்கறது.

பைத்தியக்காரர் உலகத்துல எப்படி இருப்பார்? யாரோ ஒருத்தருக்கு ரிஸர்ச் பண்ணனும்னு தோணித்து. பைத்தியக்காரர் எப்படி இருப்பார், எப்படி ஆகறது என்று. தன்னோட நண்பரை அந்த மாதிரி ஆஸ்பத்திரிக்கு கூட்டிண்டு போனார். போறதுக்குள்ள ஒரு ஆச்சர்யம் பாத்துட்டார். ஒரு பெரிய அறைகளு வெச்சிருப்பா, அதுல ரெண்டு விபாகம் (பிரிவு) வேற. அங்கே ஒரு ஆள் இருக்கா, இங்கே ஒரு ஆள் இருக்கா. இங்கே கம்பி எல்லாம் பிடிச்சு மேல ஏறிண்டு இருக்கான், கை, காலெல்லாம் காயமாகி, அடி பட்டு, ரத்தம் எல்லாம் கொட்டிண்டு இருக்கு. என்னப்பா, நீ இப்படி பைத்தியக்காரனாகி இருக்கேன்னு கேட்டா.

இவனுக்கு கல்யாணம் பண்ணனும்னு அப்பா அம்மா நினைச்சா. சரி. அந்த பொண்ணை இவன் பாத்தான். சரி. அந்த பொண்ணு கூட கல்யாணம் ஆகறதாக இருந்தது. ஆனா அந்த பொண்ணு கூட கல்யாணம் ஆகாததுனால பைத்தியம் பிடிச்சுடுத்துன்னு.

பக்கத்துல இருக்கற இன்னொருவன் அந்த கம்பி எல்லாம் வாயினால கடிச்சுண்டு இருக்கான், வாயில ரத்தம் வரது, அவனுக்கென்ன ஆச்சுன்னா. அந்த பொண்ணு கூட இவனுக்கு கல்யாணம் ஆச்சு,அதனாலதான் பைத்தியம் ஆச்சுன்னா! பைத்தியம்னு சொன்னா, இப்படி எல்லாம் இருக்கு, பாருங்கோ! பைத்தியக்காரான்னு சொன்னா இப்படித்தான் இருப்பா. இதெல்லாம் வினோதம்தான், உண்மைன்னு யாரும் நினைச்சுக்கக் கூடாது.

பால, உன்மத்தன்னு சொன்னா, இப்படி எல்லாம் ஆச்சு. பிஶாசம். பிஶாசம் பாத்துட்டு வந்து யாரும் சொல்ல மாட்டா. ஆனா பிஶாசம் போல இருக்கறவாளை தினமும் நாங்கள் எல்லாம் பார்த்துண்டு இருக்கோம். ஆனா, சில வீடுகளில பிஶாசம் என்று யாரை சொல்வார்கள் என்று நாங்கள் வாயை திறந்து சொல்லக்கூடாது.



யாரோ ஒருத்தர் தேசத்துக்கு சேவை பண்ணனும்னு போனார். எல்லாத்தையும் பார்த்துட்டு, ஏதோ கேள்வி கேக்கணும்னு தோணிடுத்து, கேட்டார். 'உனக்கு தைரியம் இருக்கோ?'

'ரொம்ப பயங்கரமான தைர்யம் இருக்கு'. 'சரி, நீ காட்டுக்குள்ள போயிண்டிருக்கேன்னு வெச்சுக்கோ. உன் மாமியாரும் வந்துண்டு இருப்பார். உன் பொண்டாட்டியும் வந்துண்டு இருப்பார். அப்போ, மூணு பேரையும் பார்த்து ஒரு சிங்கம் வந்துடறது. Attack பண்ணறது, உன் மாமியாரையும் உன் பொண்டாட்டியையும். ஆனா நீ மட்டும் அங்கே புருஷனா இருக்கிறாய் இல்லையோ, நீ காப்பாத்தணுமே, நீ சொல்லு இப்போ - யாரை முதலில காப்பாத்துவ - மாமியாரையா, இல்லை பொண்டாட்டியையா?' இவன் சொல்றதுலேர்ந்து யார் ரொம்ப பிஶாசம் மாதிரி என்று தெரிந்திடுமே என்று. அவன் சொன்னான், 'நான் மொதல்ல அந்த சிங்கத்தைக் காப்பாத்துவேன்'!

அதனால, குண ஸ்வபாவத்துனால பிஶாசத்தை நினைவுக்கு கொண்டு வருவார் என்று. இதெல்லாம் சும்மா விநோதத்துக்குத்தான், நம்மை பிஶாசம் என்று சொல்றாரே என்று நினைக்கக் கூடாது.

உலகத்துலே இப்படி பால, உன்மத்த, பிஶாச - இப்படி எல்லாம் பாக்கறோமோ இல்லியோ? மஹான்கள் இப்படியா இருப்பார் என்று நீங்கள் கேள்வி கேக்கலாம். அவாளும் பால, உன்மத்த, பிஶாச மாதிரி ஸ்வபாவத்தோட இருப்பா. எதுக்கு? அனுக்ரஹம் பண்றதுக்கு.

(தொடரும்)



# இதழாசிரியர் உரை

எல்லாம் வல்ல குருவருளாலும், திருவருளாலும் நலம் பெருகுக.

இந்த இதழ் தங்கள் கரங்களில் தவழும் நேரம் ஸ்ரீக்ஷேத்ர ஶகடபுரத்தில் ப்ரம்மோத்ஸவம் தொடங்கி நடைபெற்றுக் கொண்டிருக்கும் புனித வேளையாகும்.

மிகவும் சிறப்பு வாய்ந்த ப்ரம்ம ரதோத்ஸவம் அக்ஷய திருதியை 21.4.2015 செவ்வாய்க்கிழமை புனித நன்னாளில் நடைபெற உள்ளது. இந்தக் கண் கொள்ளாக் காட்சியைக் கண்டு தரிசனம் செய்து இன்புற அனைவரும் ஸ்ரீக்ஷேத்ர ஶகடபுரத்திற்கு வாருங்கள் ! வாருங்கள் ! என மிக்க அன்போடு அழைக்கின்றோம்.

அன்றைய தினம் மதியம் தேருக்கு ஸ்ரீஸந்தான வேணுகோபால கிருஷ்ணர் எழுந்தருளும் அழகே தனி.

முன்னே நடமாடும் ஸ்ரீகிருஷ்ணராய் நமது ஸத்குருநாதர் ஸ்ரீஸ்ரீ கிருஷ்ணானந்தர் நடந்துவர, பின்னே தானும் அவரும் வேறல்ல என்று உணர்த்திக் கொண்டு வரும் ஸ்ரீ கிருஷ்ணரின் அழகே வெகு சிறப்பு.

தங்கம், வெள்ளி, பவழம் என்று பல்வேறு உயர்ந்த பொருட்களை ரதத்தின் முன்னே ஸ்ரீஸ்ரீ பெரியவா அவர்கள் அள்ளித் தெளிக்க, பேறு உள்ளவர்கள் பிடித்துக் கொள்வார்கள்.



விலைமதிப்பற்ற பர ப்ரம்மமாய் குருநாதர் எழுந்தருளியிருக்க, எத்தனை பேராலே பற்றற்றுப் பற்றிக்கொள்ள முடிகிறது ?

நேரில் வாருங்கள், நிறையக் காணுங்கள்.

'ஸ்ரீவித்யா' மாத இதழின் 10ஆம் ஆண்டு பூர்த்தி வைபவம் 05.04.2015 ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீஸ்ரீ பெரியவா பேரருளால் தாம்பரம் ஸ்ரீமடத்தில் 'குருபக்த சிரோமணி' திரு. J.P. திருநாவுக்கரசு அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அமுதசுரபி ஆசிரியர், மூத்த பத்திரிகையாளர் டாக்டர் திருப்பூர் கிருஷ்ணன் வெகு அழகாக சிறப்பாக விழாப் பேருரை நிகழ்த்தினார்கள். விரிவான கட்டுரை தனியே மலர்கிறது. அந்தப் புகைப்படங்கள் இம்மாத அட்டையின் உள்ளும் புறமும் அலங்கரிக்கின்றன.

**வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்**
**பார்த்தற்குப் பாசுபதம் அருள் செய்தவன் பத்தருள்ளீர்**
**கோத்தன்று முப்புரந் தீ வளைத்தான் தில்லை அம்பலத்துக்**
**கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதன்றோ நந்தம் கூழைமையே!**

என்பார் அப்பரடிகள். கூழைமை என்றால் கடமை என்றே பொருள். தில்லைக் கூத்தனுக்கு ஆட்பட்டிருப்பதே நமது கடமையாகும் என்கிறார்.

நமக்குக் கடமை நமது ஸ்ரீஸ்ரீ பெரியவா திருவடிக்கே எந்நாளும் அடிமையாகித் தொண்டு செய்வதே ஆகும். அதற்கான பேரருளை அவர்களிடமே வேண்டுவோம்.

அனைவருக்கும் இனிய தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

குருவருளும், திருவருளும் எப்போதும் நம்மோடு இருக்கட்டும்.

**ந. ஸ்ரீனிவாசன்**

# அம்பாளின் வைபவம்

முனைவர் கோடா வேங்கடேஸ்வர ஶாஸ்த்ரிகள்



**ப**ல உலகங்களை ஸ்ருஷ்டித்துக் காப்பாற்றிக் கொண்டிருக்கும் ஜகன்மாதாவின் வைபவத்தை 1000 தலைகள் உள்ள ஆதிசேஷனாலும் கூறவது கடினமேயாகும். ஆயினும், வாக் தேவிகள், அம்பாளின் அனுக்ரஹத்தைப் பெற்று ஸஹஸ்ரநாமம் வழியாக ஓரளவு கூறினார்கள். அதில், அம்பாளை பல உருவங்களுடனும், உருவமே அற்ற ப்ரம்ம ரூபமாகவும் கூறியுள்ளார்கள். உருவங்களுள்ள லலிதா, த்ரிபுரஸுந்தரீ, காமேஶ்வரீ, காமாக்ஷீ, துர்கா போன்ற பல ஸ்வரூபங்கள் அந்தந்த ஆசைகளை நிறைவேற்றும் பொருட்டு, கூறப்பட்டுள்ளன.

மனிதனுக்கு அறம், பொருள், இன்பம் என்கிற மூன்று வீடுபேறுகளைத் தவிர மோக்ஷத்திலும் ஆசையுண்டு. மோக்ஷம் என்றால் பரம்பொருளின் உண்மையை அறிந்து, அதனால், பல கோடி பிறவிகளில் தான் செய்த புண்ய, பாவங்களைப் பொசுக்கிவிட்டு மறுபிறவி அற்ற நிலையைப் பெறுவதே ஆகும்.

இதற்கு உபநிடதங்களில் ஶ்ரவணம், குருமுகமாக செய்வதே உபாயம். ஆனால், அப்படிப்பட்ட குருக்கள் கிடைப்பது மிகவும் அரிது. அதற்காகவே, வாக் தேவிகள் அம்பாளின் திருநாமாக்களைக் கூறும் வாயிலாக குருமூர்த்தியான அம்பாள் அருள் கிடைக்க, உருவமற்ற நிலையைக் கூறியுள்ளனர். அதில் சில நாமாக்களைப் பார்ப்போம்;

(1) **நிர்விகாரா :-** விகாரம் என்றால் மாறுபடுதல். உலகத்தில் உள்ள எல்லா பொருள்களும் மாறிக் கொண்டேயுள்ளது. வீடுகள், மாளிகைகள் ஆகின்றன. மரங்கள் வளர்கின்றன. பிராணிகள் கிரமமாக முதுமையையும் மரணத்தையும் அடைகின்றன. ஸமுத்திரம் போன்ற சில மாறாமல் இருப்பதாகத் தோன்றினாலும், அவைகளிலுள்ள கொதிப்பும், அலைகளும், அதற்கு மாறுதல் உண்டு என்று காட்டுகிறது.

ஆகையால் உலகத்தில் மாற்றமற்ற பொருளே இல்லை. அம்பாளோ ஒரு மாறுதலும் இன்றி ஸாக்ஷியாக எப்போதும் உள்ளாள். உலகம் தோன்றும் பொழுதும், அழியும் பொழுதும் அதன் மாறுதல்களால் தனக்கு ஒருவிதமான இன்ப துன்பங்கள் அற்று இருப்பாள். ஸமஸ்த பிராணிகளும் முன்னேற வேண்டும், அவர்களுக்கு பக்தியும், ஞானமும் வரவேண்டும், ஸத்குரு சங்கமும் ஸத் ஸங்கமும் கிடைத்து அவர்கள் வாழும் ஸமயம் மன நிறைவுடனும், இஹலோக போகங்களுடன் வாழ்ந்து பிறகு ஶிவஞானமடைந்து முக்தி பெற வேண்டும் என்றே நினைப்பாள்.

அப்படிப்பட்ட பரம ஶாந்த வடிவமான கல்லோலங்கள் அற்ற பரம கருணா மூர்த்தி அம்பாள். அந்த அம்பாளுக்கு **'நிர்விகாரா'** என்ற திருநாமம் ஏற்பட்டது. இதை நாம் சிந்தனை செய்து அம்பாளின் அருளைப் பெறுவோமாக!

## சித்திரை மாத சிறப்புகள்

★ சிவன், பார்வதிக்கு கயிலாயத்தில் பங்குனி உத்திரத்தன்று திருமணம் நடந்தது. அவர்கள் தம்பதி சகிதமாக சித்திரையன்று பொதிகையில் காட்சி தந்தனர். இந்த காட்சியை தரிசிக்க அனைத்து நதி தேவதைகளும் பொதிகைக்கு வந்தனர். அந்த நதிகள் அனைத்தும் தங்களிடம் மக்கள் கரைத்த பாவங்களையெல்லாம், தாமிரபரணியில் மூழ்கி விமோசனம் பெற்றனர். எனவே தாமிரபரணியில் சித்திரை விஷுவன்று நீராட ஆயிரக்கணக்கான பக்தர்கள் வருகின்றனர். சித்திரை விஷுவன்று தாமிரபரணியில் குளித்தால் பாவங்கள் கரையும் என்பது ஐதீகம்.

★ இரவில் அகத்தியருக்கு சிவ– பார்வதி திருமண காட்சி அருளும் நிகழ்ச்சி தாமிரபரணி கரையில் உள்ள பாபநாச நாதர் கோவில் முன்பு நடக்கும். இவர்களுக்கு திருமணம் நடந்தபோது ஒட்டுமொத்த உலகமும் அக்காட்சியைக் காண இமயத்திற்கு திரண்டு சென்றது. அந்த பளு தாங்காமல் வடக்கு தாழ்ந்து, தெற்கு உயர்ந்தது. அப்போது உலகை சமநிலைப்படுத்த பொதிகைக்கு அனுப்பப்பட்டார் அகத்தியர். சித்திரை விஷுவன்று அவரது கதையைப் படிப்பது தியாக உள்ளத்தை நமக்கு தரும்.



# ॥ स्तोत्रमञ्जरी ॥

# ஸ்தோத்ர மஞ்ஜரீ

## ॥ श्रीचिरञ्जीवि रामायणम् ॥

## ஸ்ரீசிரஞ்ஜீவி ராமாயணம்

पायात् क्षीराब्धिशायी कमलभवनुतः कोसलेन्द्रस्य पुत्रो
रामः सौमित्रियुक्तः कुशिकसुतगिरा ताटकाप्राणहारी ।
यज्ञं निर्वर्त्य गङ्गासुचरितमुदितः पावयंस्तामहल्यां
सीतामुद्वाह्य जित्वा पथि भृगुतनयं प्राप्य हर्षादयोध्याम् ॥ १

பாயாத் க்ஷீராப்தி4ஶாயீ கமலப4வநுத: கோஸலேந்த்3ரஸ்ய புத்ரோ
ராம: ஸௌமித்ரியுக்த: குஶிகஸுதகி3ரா தாடகாப்ராணஹாரீ ।
யக்3ஞம் நிர்வர்த்ய க3ங்கா3ஸுசரிதமுதி3த: பாவயம்ஸ்தாமஹல்யாம்
ஸீதாமுத்3வாஹ்ய ஜித்வா பதி2 ப்4ருகு3தனயம் ப்ராப்ய ஹர்ஷாத3யோத்4யாம் ॥ 1

श्रीरामं नौमि कैकेय्यभिलषितवरात् खिन्नमालोक्यतातं
तद्वाचा त्यक्तराज्यं झटिति वनगतं मैथिलीलक्ष्मणाभ्याम् ।
स्वर्गस्थे राज्ञि शोकात् कृतनुतिभरतप्रार्थनात् पादुके स्वे
दत्त्वास्मै तन्निवृत्त्या स्थितमनुजयुतं सेवितं चित्रकूटे ॥ २

ஸ்ரீராமம் நௌமி கைகேய்யபி4லஷிதவராத் கி2ன்னமாலோக்யதாதம்
தத்3வாசா த்யக்தராஜ்யம் ஜ்ஜ4டிதி வனக3தம் மைதி2லீலக்ஷ்மணாப்4யாம் ।
ஸவர்க3ஸ்தே2 ராக்3ஞி ஶோகாத் க்ருதநுதி ப4ரதப்ரார்த்த2னாத் பாது3கே ஸ்வே
த3த்வாஸ்மை தன்னிவ்ருத்யா ஸ்தி2தமனுஜயுதம் ஸேவிதம் சித்ரகூடே ॥ 2

हत्वारण्ये विराधं मुनिनिकरमुदे पञ्चवट्यामुषित्वा
वैरूप्यात् शूर्पणख्याः निशित (कुपित) खरमुखान् ध्वंसयित्वार्धयामम् ।
मारीचं मर्दयित्वा दशवदनहृतां तत्र सीतामदृष्ट्वा
दग्ध्वा क्रुद्धं कबन्धं शबरिवनितया पूजितं राममीडे ॥ ३

ஹத்வாரண்யே விராத4ம் முனிநிகரமுதே3 பஞ்சவட்யாமுஷித்வா
வைரூப்யாத்த ஶூர்பணக்2யா: நிஶித (குபித) க2ரமுகா2ன் த்4வம்-
ஸயித்வார்த்த4யாமம் ।
மாரீசம் மர்த3யித்வா த3ஶவத3னஹ்ருதாம் தத்ர ஸீதாம் அத்3ருஷ்ட்வா
த3க்3த்4வா க்ருத்3த4ம் கப3ந்த4ம் ஶப3ரிவனிதயா பூஜிதம் ராமமீடே3 ॥ 3

पम्पातीरे हनूमत्पटुतरवचनादृश्यमूकं च गत्वा
कृत्वा सुग्रीवसख्यं निशितशरवरैः सप्तसालांश्च भित्त्वा ।
हत्वा सुत्रामपुत्रं दिनकरजनुषस्तस्य राज्यं च दत्त्वा
तेनानीतैः कपीशैर्विदित (विचित) सकलभूमण्डलं राममीडे ॥ ४

பம்பாதீரே ஹநூமத்படுதரவசனாத்3ருஶ்யமூகம் ச க3த்வா
க்ருத்வா ஸுக்3ரீவஸக்2யம் நிஶிதஶரவரை: ஸப்தஸாலாம்ஶ்ச பி4த்வா ।
க்ருத்வா ஸுத்ராமபுத்ரம் தி3னகரஜ3னுஷஸ்தஸ்ய ராஜ்யம் ச த3த்வா
தேனானீதை: கபீஶைர்விதி3த (விசித) ஸகலபூ4மண்ட3லம் ராமமீடே3 ॥ 4

सेतुं बद्ध्वा समुद्रे सकलबलयुतं रावणं कुम्भकर्णं
हत्वा तत्पुत्रवर्गं तदनुजमभिषिच्याथ लङ्काधिनाथम् ।
सीतां लब्ध्वाग्निशुद्धां सकलसुरनुतं पुष्पयानाधिरूढं
सुग्रीवाद्यैरुपेतं रघुपतिमनिशं प्राप्तराज्यं नमामि ॥ ५

ஸேதும் ப3த்3த்4வா ஸமுத்3ரே ஸகலப3லயுதம் ராவணம் கும்ப4கர்ணம்
ஹத்வா தத்புத்ரவர்க3ம் தத3னுஜ3மபி4ஷிச்யாத2 லங்காதி4நாத2ம் ।
ஸீதாம் லப்3த்4வாக்3னிஶுத்3தா4ம் ஸகலஸுரநுதம் புஷ்பயானாதி4ரூட4ம்
ஸுக்3ரீவாத்3யைருபேதம் ரகு4பதிமனிஶம் ப்ராப்தராஜ்யம் நமாமி ॥ 5

सकृदपि यदि रामेत्युच्चरन् यस्तु मर्त्यः
सकलदुरितसङ्घैः संयुतो वापि नूनम् ।
न निवसति स मातुर्गर्भवासी कदाचित्
निवसति हरिलोके नास्ति सन्देहलेशः ॥ ६

ஸக்ருத3பி யதி3 ராமேத்யுச்சரன் யஸ்து மர்த்ய:
ஸகலது3ரிதஸங்கை:4 ஸம்யுதோ வாபி நூனம் ।
ந நிவஸதி ஸ மாது3ர்க3ர்ப4வாஸீ கதா3சித்
நிவஸதி ஹரிலோகே நாஸ்தி ஸந்தே3ஹ லேஶ: ॥ 6

॥ इति स्तोत्रार्णवे श्रीचिरञ्जीविरामायणम् संपूर्णम् ॥

॥ இதி ஸ்தோத்ரார்ணவே ஸ்ரீசிரஞ்ஜீவிராமாயணம் ஸம்பூர்ணம் ॥



ஸ்ரீதோடக பகவத் பாதரால் அருளப்பட்ட

# ச்ருதிஸார ஸமுத்தரணம்

தமிழாக்கம்: முனைவர் கோடா வெங்கடேச்வர சாஸ்த்ரிகள்

त्वमसीति पदद्वयमेति युजां
तदिति ध्वनिना सह तत्त्वमिति ।
क्रियया सह नामपदं समिया-
न्निरपेक्षमुपैत्यनया हि युजाम् ।। ७७

த்வமஸீதி பத[3]த்[3]வயமேதி யுஜாம்
ததி[3]தி த்[4]வனினா ஸஹதத்வமிதி ।
க்ரியயா ஸஹ நாமபத[3]ம் ஸமியாந்
நிரபேக்ஷமுபைத்யனயா ஹி யுஜாம் ।। 77

**பொருளுரை :** '**த்வம்**' எனும் சொல்லும் '**அஸி**' எனும் சொல்லும் முதலில் ஒன்றுடன் ஒன்று சேருகிறது. பிறகு அது '**தத்**' எனும் பொருளுடன் சேர்கிறது. ஆகையால், 'நீ அதுவாக உள்ளாய்' என்றுதான் பொருள் கொள்ள வேண்டும்.

**விளக்கவுரை :** '**தத்வமஸி**' எனும் வாக்யம் ஜீவனும் ப்ரம்மமும் ஒன்று என்றே கூறுகிறது என்று முன் சொல்லப்பட்டது. இங்கு, பூர்வவாதி, ப்ரம்மம் ஜீவனாக ஆகி விடுகிறது என்று கருதுகிறான். ஆனால், அது சரியல்ல; ஜீவனுக்கு ப்ரம்மத் தன்மையே இங்கு கூறப்பட்டுள்ளது. இதற்கு அத்தாட்சி என்ன என்று பார்க்க வேண்டியுள்ளது. இந்த '**தத்வமஸி**' எனும் வாக்கியத்தில் '**அஸி**' என்பது வினைச் சொல். அத்துடன் 'நீ' என்ற சொல்தான் சம்பந்தப்படும். அப்பொழுது 'நீ உள்ளாய்' என்று பொருள் ஆகும். இதைக் கேட்ட பிறகு 'நான் எப்படி உள்ளேன்' என்று சந்தேகம் வருமல்லவா? அதைப் பூர்த்தி செய்ய 'ப்ரம்மாக உள்ளாய்', என்று கூறி சந்தேகத்தைப் போக்கி வைக்கிறது. ஆகையால், ஜீவன் ப்ரம்மமாய் இருக்கிறான் என்றால் அவ்விரண்டு பேர்க்கும் வேற்றுமை இல்லை என்றாகிறது.

அப்படி இல்லாமல், முதலில் '**தத்**' எனும் சொல், '**அஸி**' எனும் சொல்லுடன் சேரும் என்று சொன்னால் அது தவறாகும். ஏனெனில், '**தத்**' உடன் சேரும் '**அஸி**' என்கிற வினைச் சொல், 'தத் அஸ்தி' என்றே வரவேண்டும். ஆயினும், மேற் சொன்ன வாக்கியத்தில் 'தத் அஸி' என்றே இருக்கிறது. ஆகையால், ஜீவனுக்கு ப்ரம்மத்துடன் ஐக்யத்தைச் சொல்வது இந்த வாக்யம். பூர்வவாதி கூறுவதுபோல், ப்ரம்மத்தை ஜீவனாகக் கருதவில்லை.

## சித்திரை மாத சிறப்புகள்

★ சித்திரை மாத அமாவாசைக்கு பிறகு வரும் சுக்லபட்ச பஞ்சமி திதியில்தான் சிவபெருமானின் அவதாரமாகிய தட்சிணாமூர்த்தி சொரூபமான ஆதிசங்கர பகவத் பாதாள் அவதரித்தார். கேரள மாநிலம், காலடியில் பிறந்த அவர் தன் காலடியால் உலகை வலம் வந்து ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றே என்ற தத்துவத்தை உலகுக்கு உணர்த்தினார். இந்த சங்கர ஜயந்தியைக் கொண்டாடினால் ஸ்ரீகிருஷ்ண ஜெயந்தி, சிவராத்திரி முதலிய எல்லாவற்றையும் கடைப்பிடித்த பலனும் கைகூடும் என்று பெரியோர் கூறுகின்றனர்.

★ பகவத்கீதைக்கும், பிரம்ம சூத்திரத்திற்கும் பாஷ்யம் எழுதி ஸ்ரீரங்கத்திலும், திருமலை திருப்பதியிலும் எம்பெருமானின் பூஜாவித சம்பிரதாயங்களை அமைத்துக் கொடுத்த ஸ்ரீராமானுஜரின் ஜயந்தியும் சாத்துமுறை வைபவமும் இம்மாதத்தில்தான் கொண்டாடப்படுகிறது. இதேபோல் சுமார் 700 ஆண்டுகளுக்கு முன்னால் உடுப்பி திருத்தலத்தில் ஸ்ரீகிருஷ்ணர் சிலையை பிரதிஷ்டை செய்து பகவானுக்கு பூஜை, மற்ற உபசாரங்களும் செய்ய, எட்டு மடங்களை நிறுவிய ஸ்ரீமத்வாச்சாரியாரின் ஜயந்தியும் இம்மாதத்தில் விமரிசையாக கொண்டாடப்படுகிறது.

★ ஸ்ரீரங்கத்தில் கஜேந்திர மோட்ச விழா சித்திரை மாதத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

# அத்வைத மகரந்தம்

ஸ்ரீ ஸ்வாமி ஓங்காரானந்தர்



சென்ற இதழ் தொடர்ச்சி

**அ**றியப்படுபொருள் அறியப்படாத பொருள் ஆகியவற்றை அறியும் ஸ்வரூபமாக நான் இருக்கிறேன். ஸத்யம், ஞானம், ஆனந்தம் ஆகிய மூன்றும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம். இனமோ, குணமோ, தர்மமோ அல்ல. உள்ளது ஒரே பொருள் எனின் அதற்கு இனமில்லை. எடுத்துக்காட்டாக ஆகாயத்திற்கும் இனம் இல்லை. குடத்துக்குள் இருக்கும் ஆகாயமும், புறத்தே இருக்கும் ஆகாயமும் ஒன்றுதான்.

இருப்பு, அதாவது 'ஸத்' ஒன்றுதான். உபாதி த்ருஷ்டியில்தான் வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஸத்வம் இருப்புத் தன்மை உடையதன்று. இருப்பே ஸத்வம். அதுவே ப்ரஹ்மம். உணர்வும், அதாவது ஞானமும் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம். தீயின் தன்மை வெம்மை. நீரின் தன்மை குளிர்ச்சி. வெம்மையில்லாமல் நெருப்பில்லை. குளிர்ச்சியில்லாமல் நீரில்லை. அதுபோல் ப்ரஹ்மமும் ஞானமும் பிரிக்க முடியாதவை. ஞானம் ப்ரஹ்மத்தின் குணமன்று. குணம் என்றால் கோபம். வெறுப்பு போன்று வந்து இருந்து நீங்கக் கூடியது.

மேலும், ஞானம் குணமென்றால் அது அறியப்படு பொருளாகும். அறியப்படுவதால் அது அநாத்மா ஆகிவிடும். ஒரு பொழுதும் அறியவே முடியாதென்றால் முயற்கொம்புபோல் இல்லாத பொருளாகி அஸத்தாகிவிடும். வேதாந்தம் படித்து ப்ரஹ்மத்தைத் தெரிந்து கொள்வதன்று. தேவையில்லாதவற்றை நீக்கி, ஏற்கெனவே இருக்கும் ப்ரஹ்மத்தை அறிந்து கொள்வதாகும். நானே அறிவு ஸ்வரூபமாக சித் ஸ்வரூபமாக இருக்கிறேன். உணர்வே நான் என்பதனைத் தாயுமானவரும் -

**பாராதி பூதம் நீ அல்லை - உன்னிப்**
**பாரிந்திரியம் கரணம் நீ அல்லை**
**ஆராய் உணர்வு நீ என்றான் - ஐயன்**
**அனபாண் உரைத்த சொல் ஆனந்தம் தோழி**

என வரும் பகுதியில் தெளிவுறக் கூறுகின்றார்.

நான் உணர்வு வடிவமாக இருக்கிறேன் என்று எண்ணுவதற்கும், கூறுவதற்கும் மனம் தேவை. அப்படிச் சொல்லாவிடினும், எண்ணாவிடினும் நான் உணர்வாக இருக்கிறேன் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஆத்மா சுய ஒளியுடையதாகையால் தன்னை விளங்கிக் கொள்ள மற்றொருபொருள் தேவையில்லை. நான் ஸத் ஸ்வரூபம். நான் சித்ஸ்வரூபம். ஸத்தே சித், சித்தே ஸத். எனவே இரண்டு பொருள்கள் இல்லை என்பது தெளிவாகின்றது.

**அஹமேவ ஸுகம் நாந்யதந்யச்சேந்நைவ தத்ஸுகம் ।**
**அமதர்த்தம் ந ஹி ப்ரேயோ மதர்த்தம் ந ஸ்வத: ப்ரியம் ॥**

(ஶ்லோகம்-24)

நான் இன்ப வடிவினன். இன்பம் எனக்கு வேறாக இருக்குமானால் அது இன்பமன்று. இன்பம் எனக்கில்லையெனில் என் அன்பிருக்காது. இன்பம் என் பொருட்டாயின் அது தானே யாண்டும் அன்புக்குரியதாகும். எனவே நானே இன்பவடிவினன்.

அடுத்து, நான் இன்ப வடிவம் என்பது கூறப்படுகிறது. ஆத்மாதான் ஆனந்த வடிவம். இருப்பு, உணர்வு, இன்பமே ப்ரஹ்மம் எங்கும் நிறைந்தது. அறிவுப்பெரு வெளியாக இருப்பது ஆனந்த வடிவமாக இருப்பது.

(தொடரும்)

**சித்திரை மாத சிறப்புகள்**

★ சித்ரா பௌர்ணமி தினத்தில் குமரி கடலில் சூரிய அஸ்தமனமும், சந்திரோதயமும் ஒரே நேரத்தில் தரிசிப்பது விசேஷம்.

# வள்ளுவம் உங்களுக்காக வடமொழியில்...





## १६. क्षमा (सहिष्णुता)

### அதிகாரம் 16 - பொறை உடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 1

खनतोऽपि जनानत्र धरित्री सहते यथा ।
तथा क्षमा परो धर्मः स्वनिन्दां कुर्वतामपि ।। १

தாங்குகின்ற நிலமானது, தன்னையே (நிலத்தையே) தோண்டுகிறவர்களுக்கும் அது நலமே செய்யும்.அதுபோலத் தம்மை இகழ்பவர்களையும் பொறுத்துக் கொண்டு நல்லதே செய்தல் வேண்டும்.

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. 2

अत्याचारस्य सहनं साध्वत्र परिगण्यते ।
ततोऽपि विस्मृतिस्तस्य भवतीह गरीयसी ।। २

எல்லை மீறித் தீமை செய்பவர்களையும் பொறுத்துக் கொள்ளுதல் நல்லது. அத்தீமைகளை மறந்துவிடுதல் அதனைவிட நன்மையாகும்.

இன்மையின் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 3

दारिद्र्येऽपि हि (दारिद्र्यादपि) दारिद्र्यमतिथीनामनादरः ।
शक्तिष्वपि च शक्तिः स्यान्मूर्खाकृत्यसहिष्णुता ।। ३

நிறைந்த வறுமை என்பது விருந்தினரை வரவேற்று, உபசரிக்காமை ஆகும். அதுபோல நிறைந்த வலிமை என்பது தீயோர் செய்யும் குற்றங்களைப் பொறுத்தலே ஆகும்.

நிறைஉடைமை நீங்காமை வேண்டின் பொறைஉடைமை
போற்றி ஒழுகப் படும். 4

सभ्यतापगमानिच्छुर्भवेद्यदि नरो भुवि ।
क्षमागुणस्य संरक्षामवश्यं हि समाचरेत् ।। ४

நிறைகுணம் என்னும் பெருமை நிலைக்க வேண்டுமானால் ஒருவன் பொறுமையை என்றும் போற்றி ஒழுகவேண்டும்.

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து. 5

अपकर्तॄ दण्डयतः कलयेयुर्न सज्जनाः ।
सहिष्णूब्बहुमन्येरन् मत्वोत्तमसुवर्णवत् ।। ५

தீமை செய்தவர்களை தண்டித்தவர்களை உலகம் மறந்துவிடும். ஆனால் அவர்களைப் பொறுமையுடன் மன்னித்தவர்களை பெரியவர்கள் பொன்போல வைத்துப் போற்றுவர்.

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். 6

लभन्तेऽत्यल्पमानन्दं दण्डयन्तोऽपकारिणः ।
क्षाम्यन्तश्शाश्वतीं कीर्तिं प्राप्नुवन्तीह भूतले ।। ६

தீங்கு செய்தவரை தண்டித்தவர்களுக்கு அன்று மட்டுமே இன்பம். ஆனால் அதனைப் பொறுத்து மன்னித்தவர்களுக்கு வாழ்நாள் முழுவதும் புகழ் உண்டாகும்.

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. 7

क्रूरमत्याहितं स्वं प्रत्याचरद्भ्योऽपि दुःखितः ।
अन्याय्यं नाचरेत्तान्प्रत्येतदत्यन्तशोभनम् ।। ७

செய்யக்கூடாத தீங்கினை ஒருவர் செய்தாலும் கூட அதற்காக வருந்தி அறத்திற்குப் புறம்பான செயல்களைச் செய்யக்கூடாது.

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். 8

अहङ्कारवशात्स्वं प्रत्यन्याय्यं कुर्वतो जनान् ।
मानवो विजयेतात्र क्षमया परया स्वया ।। ८

ஆணவ மிகுதியால் தமக்குத் தீமை செய்தவர்களையும் பொறுத்து, அவர்களைப் பொறுமை என்னும் தம் தகுதியால் வென்றாள வேண்டும்.

**துறந்தாரின் தூய்மை உடையார் இறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோற்கிற் பவர்.** 9

**अधार्मिकाणां अयतां सहन्ते दुर्वचांसि ये ।**
**यतिभिस्ते समानास्स्युः पवित्रा गृहमेधिनः ।।** ९

வரம்பு மீறி வசை பாடுகிறவர்களையும் பொறுத்துக் கொள்ளும் தூயோர், துறவியரைக் காட்டிலும் மேலானவராகக் கருதப் படுவர்.

**உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்**
**இன்னாச்சொல் நோற்பாரின் பின்.** 10

**उपवासव्रताचारा महान्तोऽत्र मता भुवि ।**
**परनिन्दासहिष्णुभ्यस्सद्भ्यो लघुतरा हि ते ।।** १०

உணவைத் தவிர்த்து தவம் செய்கிறவர்களைக் காட்டிலும் பிறர் கூறும் வசைச் சொற்களைப் பொறுத்துக் கொள்பவர்கள் இன்னும் மேலானவர்கள்.

### சித்திரை மாத சிறப்புகள்

★ சித்திரை மாத அமாவாசையை அடுத்த சுக்ல பட்ச திருதியை அட்சய திருதியை எனப் போற்றப்படுகிறது. அன்று தானங்கள் செய்வது பெரும் புண்யத்தைத் தரும், தங்கம் வாங்க மூன்று மடங்காக தங்கம் சேரும் என, சமீபகாலமாக நம்பப்படுகிறது. சித்திரை மாதம் திருதியை அன்று பகவான் விஷ்ணு மீனாக (மச்சம்) அவதாரம் செய்தார். ஆகவே, அன்று மத்ஸ்ய ஜெயந்தி கொண்டாடப்படுகிறது.

★ திருச்சியில் தாயுமான சுவாமி கோயிலில் சித்திரை மாதத்தில் தேர்த் திருவிழா பத்து நாட்கள் சிறப்பாக நடைபெறும். ஸ்ரீரங்கத்தில் விருப்பன்ன உடையார் என்ற மன்னர், 52 கிராமங்களை பெருமாள் பெயரில் எழுதிக் கொடுத்ததை முன்னிட்டு சித்திரை உற்சவம், ஒவ்வொரு வருடமும் நடைபெற்று வருகிறது.

# மகாபாரத கதைச் சித்திரங்கள் – மனோதத்துவ முறைப்படி ஓர் ஆய்வு

டாக்டர் எஸ். அன்னபூர்ணா

சென்ற இதழ் தொடர்ச்சி

நல்ல குணங்கள் பல இருந்தும், அதனால் பேரும் புகழும் அடைந்தும் சூதாட்டத்தினால் எவ்வளவு கஷ்டங்களுக்கு உள்ளானார் யுதிஷ்டிரர். சூதாட்டத்தில் த்ரௌபதியை பணயம் வைத்து, சரித்திரத்தில் இதுநாள் வரை நடக்காத தீங்கை, த்ரௌபதிக்கு இழைத்து, அதனால் தன் ஸஹோதரர்களிடம் அவமானப்பட்டார். இது தர்மராஜனின் மனதைத் துளைக்கும் வேதனை. இது வெளியில் சொல்லிக் கொள்ள முடியாத இழிநிலை. தன் நிலையில் தாழ்ந்து விட்டவன் தனது நிலையை வெளிக்காட்டிக் கொள்ள விரும்ப மாட்டான். மாறாக உயர்த்திக் கொள்வதற்கும், உயர்ந்ததாகக் காட்டிக் கொள்வதற்கும் முயற்சி செய்வான். வனவாசத்தில் பாண்டவர்களும் இதையே செய்தனர். தம்முடைய வலிமைகளால் பெருக்கிக் கொள்ள அவர்கள் தமது வனவாசத்தைப் பயன்படுத்திக் கொண்டனர்.

துரியோதனனுக்கு Psychic isolation, தர்மராஜனுக்கு psychic identiy. துன்பத்தில் இருந்தாலும் தானே ஹீரோ ஆக இருக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு. வனவாசத்தில் இருக்கும் பொழுது பிருஹஸ்தஸ்வரிடம் யுதிஷ்டிரன் சொல்லும் வார்த்தைகள் -

> **''புடமி ராஜ்யமுல**
> **விடிசி ம்ருகாவலும் கலஸி விவி நம்புல லோம்**
> **கடுகொனி மாயட்லிடுமல**
> **படின ந்ருபுலு கலரேயொருனு பரம முனீந்த்ரா''**

என்று புலம்புவதும் இந்த காரணத்தினால்தான். யுதிஷ்டிரரின் மற்றொரு திறமை என்னவென்றால் எதிராளியின் மனதையும் அவனது மனோ தத்துவத்தையும் அறிந்து அதன்படி நடந்து தன் காரியத்தை சாதித்துக் கொள்வது, எதிரியின் பக்கம் இருக்கும் சல்யன், பீஷ்மர், துரோணர் போன்ற குருவம்சத்தின் மூத்தவர்களையும், சுற்றத்தாரையும் கவனித்து, அவர்கள் மனதைத் தம் பக்கம் மாற்றிக் கொள்வதில்

யுதிஷ்டிரன் காட்டிய திறமைகள் அவனைச் சிறந்த மனோதத்துவ அறிஞன் ஆகக் காட்டுகின்றன. ஸ்ரீ க்ருஷ்ணரையும் -

> **''ஆபதம் கடவம் பெட்டக**
> **நோபி சுபம்வைந தானிநொட கூர்பம்மா**
> **கீ புட்டுவுனகு பாண்டு**
> **க்ஷமாபாலுடு நின்னும் ஜுபிஸனிசனியே மஹாத்மா''**

என்பதான வார்த்தைகளால் தம் குடும்பத்திற்கு விளக்காக ஆக்கிக் கொள்கிறான்.

யுதிஷ்டிரனின் சகோதரர்கள் தம் மூத்த சகோதரர் மேல் மதிப்பும், கௌரவமும் வைத்திருந்தது உண்மையே. ஆனாலும் சில நேரங்களில் தம் மனக் கொதிப்பை வெளிக்காட்டாமல் இருக்கவில்லை. சூதாட்டத்தின் பொழுது தோற்று நின்ற தமையனை, ''சூதாடிய அந்தக் கைகளை ஒடித்துவிடுகிறேன்'' என்று ஆத்திரத்துடன் எழுந்த பீமனை அர்ஜுனன் அடக்கித் தடுத்துவிடுகிறான். அதேபோல் கர்ணனிடம் மரண அடி வாங்கிக்கொண்டு வந்த யுதிஷ்டிரனை நான் கொன்றுவிடுவேன் என்று குதித்தான் அர்ஜுனன். இனி த்ரௌபதியோ சமயம் கிடைத்த பொழுதெல்லாம் யுதிஷ்டிரனை மட்டுமின்றி அர்ஜுனன் ஆகிய எல்லோரையும் திட்டி தீர்த்துவிடுகிறாள். இவையெல்லாம் அவரவர் மனதில் மண்டிக் கிடந்த உணர்ச்சிப் பிழம்புகளே.

(தொடரும்)

### சித்திரை மாத சிறப்புகள்

★ சென்னை அருகில் பொன்னேரியில் அமைந்துள்ளது ஸ்ரீகரி கிருஷ்ண பெருமாள் ஆலயம். கரிகாலச் சோழனால் கட்டப்பட்ட இந்த ஆலயத்தில், நின்ற கோலத்தில் அருளும் கண்ணன், வலக்காலை நன்றாக ஊன்றியும் இடக்காலை சற்றே மடித்து வைத்த நிலையிலும் காட்சி தருகிறார்.

★ இந்தக் கோயிலுக்கு அருகிலேயே அருள்மிகு அகஸ்தீஸ்வரர் ஆலயமும் உள்ளது. இந்தத் தலத்தில் ஆண்டுதோறும் சித்திரை மாதம் அரனும் அரியும் சந்திக்கும் வைபவம் (ஹரிஹரன் பஜார் வீதியில்) நடைபெறுகிறது!



## ஸ்ரீவித்யா 10-ஆம் ஆண்டு பூர்த்தி விழா

ஆசிரியர்

ஸ்ரீஸ்ரீ பெரியவா பேரருளால் 'ஸ்ரீவித்யா'வின் 10-ஆம் ஆண்டு பூர்த்தி விழா தாம்பரம் ஸ்ரீமடத்தில் 05.04.2015 ஞாயிற்றுக்கிழமை காலை மிகச் சிறப்பாக நடைபெற்றது.

காலை 9.40 மணிக்கு தாம்பரம் மகளிர் அணியினர் இணைந்து பக்தி பூர்வமாக அபிராமி அந்தாதி நூறு பாடல்களையும் மிகச் சிறப்பாக பாராயணம் செய்தனர்.

காலை 10.30 மணிக்கு அம்பாள் சந்நிதியில் தீபஆராதனை நடைபெற்றது.

ஸ்ரீகார்யம் ஸ்ரீ சந்திரமௌலீஸ்வரன் அவர்கள் ஸ்ரீக்ஷேத்ர ஶகடபுர திருவிழாத் தொடக்கத்தில் இருப்பதால் அங்கிருந்தே வாழ்த்துச் செய்தியினைத் தந்தார்கள்.

எனவே, விழாவிற்கு ''குருபக்த சிரோமணி'' திரு. J.P. திருநாவுக்கரசு அவர்கள் தலைமை ஏற்றுச் சிறப்பித்தார்கள்.

கோபாலபுரம் ஸ்ரீவேணுகோபாலஸ்வாமி திருக்கோயில் தலைவர் திரு. C.V. ரவீந்திரநாத், பெங்களூரு திரு. V. சந்திரசேகர், திரு. மோகன் ராமநாதன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள்.

மூத்த பத்திரிகையாளரும், அமுதசுரபி ஆசிரியருமான டாக்டர். திருப்பூர் கிருஷ்ணன் அவர்கள் மிகவும் அருமையாக குருவின்

பெருமை, குருபக்தி, இந்து சமய வழிபாட்டு முறை ஆகியன குறித்து சிறப்புரை ஆற்றி அனைவரையும் மகிழ்வித்தார்கள்.

முன்னதான குருவழிபாட்டு ஸ்லோகத்தினை பேராசிரியர் விஜயராகவ சாஸ்திரிகள் பாடினார்கள். இணை ஆசிரியர் திரு. M.K. முரளீதரன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

வில்லிவாக்கம் திரு. R.S. ஜகன்னாதன் அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினார்கள். ஆசிரியர் இலக்கிய மேகம் ந. ஸ்ரீநிவாஸன் அவர்கள் 'ஸ்ரீவித்யா'வின் பயணம் குறித்து பேசினார்கள்.

ஸ்ரீவித்யா பிரகாசனம் டிரஸ்டின் சார்பாக திரு. B. ஹரிஹரன் அவர்கள் அனைவருக்கும் நன்றி கூறினார்கள். பதிப்பாளர் திரு. N. கிருஷ்ணா, திரு. கிருஷ்ணமூர்த்தி, திரு. K.A. நடராஜன் ஆகியோர் விழாவிற்கு வருகை தந்தவர்களுக்கு இன்று சிறப்பாக வெளியிட்ட 'ஸ்ரீவித்யா செய்தி மலர்' மற்றும் முந்தைய நூல்களை பிரசாதப் பையிலிட்டு அழகாக வழங்கினார்கள்.

மதியம் அனைவருக்கும் விருந்துணவு வழங்கப்பெற்றது.

விழாவிற்கான ஏற்பாடுகளை ஸ்ரீவித்யா ட்ரஸ்டின் உறுப்பினரும், தாம்பரம் ஸ்ரீமடத்தினை சிறப்புற நிர்வகித்து வருபவருமான ஸ்ரீ வெங்கடேசன் அவர்கள் செய்து உதவினார்கள்.

பத்தாம் ஆண்டு நிறைவு விழா பல நூறு ஆண்டுகளின் தொடக்க விழாவாக சிறப்புற அமைந்ததற்காக 'ஸ்ரீஸ்ரீ பெரியவா'' அவர்களின் பொன்னார் திருவடிக் கமலங்களுக்கு அனைவரும் 'ஸ்ரீவித்யா' குடும்பத்தின் சார்பில் நன்றி தெரிவித்து விடைபெற்றோம்.







# Why do we celebrate New Year in March – April?

Several states in India ring in the New Year during the months of March – April according to the different Indian calendars. Some call it Ugadi, while some others call their New Year as Vishu and various forms of this term as pronounced in their languages.

***UGADI or YUGADI***

*Yug* refers to an alignment of the astral bodies. This alignment denotes a period of time and *Adi* means a beginning. Thus *Yugadi,* also popularly called as *Ugadi,* is the start of a period of time. The alignment here is the yearly alignment of the Earth's equator with the Sun, the Moon (New moon day) and the Zodiac of *Chaitra*. This is why this New Year festival is called a *Yugadi*. Calendars based on the moon use this as the starting point of a New Year.

*Ugadi* is the New Year in Andhra Pradesh, Karnataka, and Maharashtra. In Maharashtra it is also known as *Gudi Padva*. This is celebrated on the first day after the new moon, which occurs closest to the vernal equinox.

***VISHU***

The equinox is when the Sun is exactly over the earth's equator. It is the day when the day and night are equal. After this day the Sun begins to move towards the northern hemisphere. This point has therefore been used as the starting point for a year by those who used the Sun as the basis for the calendar.

The Indian word for equator is *Visvadrutta Rekha* referring to the line (latitude) that divides the world into 2 halves. The word *Vishu* thus denotes equal when the sun is at the equal position in its annual transit.

In Kerala it is celebrated as *Vishu*, where first thing in the morning the family members view *VishuKani,* an arrangement of flowers, fruits and a mirror – the first set of objects to be viewed on the start of a New Year.

In Tamil Nadu it is celebrated as *Putthandu,* New Year or *Varuda Pirappu,* birth of a new year. In Sri Lanka, the same day is celebrated as the Sinhala New Year, *Aluth Avurudda.*

In Orissa, it is celebrated as *Bisuba*, again coming from the root word *Bisu or Vishu*. In Nepal it is celebrated as *Biska*. In Bengal it is celebrated as *Nabo Barsho. – New Year*

In Assam it is *Bohag, Rangali Bihu*.

In Punjab, the New Year is welcomed as *Baisakhi*.

*Vishu, Bisuba, Biska, Bihu,* all come from the same root word *Vishu*

The word *Vishu* thus denotes equal and a sense of balance.

This point of balance of the sun, in its annual transit, served as an ideal point to start a New Year. It was an ideal time to take a reckoning of the skies and balance oneself, one's accounts, one's life, one's relations and one's goals before embarking on the next year.

It was celebrated not only in different parts of India, but in Persia too, as *Nowroz* and also in different parts of Europe in the pre-medieval days.

This shows that the people lived in close relationship with nature.




*Earth, Moon and Sun in alignment near vernal Equinox - Ugadi*

This day has come to stay and be celebrated as Yuga Adi or Ugadi.

Reference - https://bharathgyanblog.wordpress.com/2014/03/31/ugadi/

# குருவின் மஹிமை



**முனைவர் திருப்பூர் கிருஷ்ணன் உரையிலிருந்து**

**ஸ்ரீ**வித்யா மாத இதழின் பத்தாம் ஆண்டு நிறைவு விழாவில் அமுதசுரபியின் ஆசிரியர் முனைவர் திருப்பூர் கிருஷ்ணன் அவர்கள் ஒருமணி நேரம் மிகச்சிறப்பாக உரையாற்றினார்கள். குருவின் மஹிமை குறித்து ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்தர் அவர்கள் அருளிய ஒரு அழகான கதையைக் கூறி அனைவரையும் பக்திப் பரவசத்தில் திளைக்க வைத்தார்கள்.

ஒரு வசதிமிக்க குடும்பம். அவர்கள் வீடே - இல்லை, பங்களாவே முழுமையும் கண்ணாடியால் ஆனது. கண்ணாடி மாளிகையில் அண்ணனும் தம்பியுமாக கூட்டுக் குடும்பமாக வாழ்ந்துவந்தார்கள்.

ஒருமுறை ஒரு திருவிழாவிற்காக இல்லத்தினர் அனைவரும் சொந்த கிராமத்திற்குச் சென்றுவிட்டனர். அண்ணன்-தம்பி இருவர் மட்டுமே பங்களாவில் இருந்தனர்.

அதுசமயம் பங்களா எதிர்பாராத விதமாக தீப்பற்றிக் கொண்டது. தீ கொழுந்துவிட்டு எரிய, கண்ணாடிக் கதவுகள், ஜன்னல்கள் என அனைத்தும் வெப்பத்தின் தாக்கத்தால் உடைந்து சிதறின.

எங்கு நோக்கினும் நெருப்பு ஜ்வாலைகள். எங்கு நோக்கினும் கண்ணாடிச் சிதறல்கள். இருவரும் இருவேறு வழியில் தப்பித்து ஓட முயல்கின்றனர். இவையனைத்தும் ஒருகணப் பொழுதில் நடந்திடும் செயல்கள்.

அண்ணன் செல்கிற வழியில் தப்பிக்கும் வேகத்தில் கண்ணாடிச் சிதறல்கள் மீது கால் பதித்து ஓட, ரத்தம், வலி, அவஸ்தை கூடிட நெருப்பு பல பக்கங்களிலும் இருந்து துரத்திட வெளியேறி மயங்கி வீழ்ந்தான்.

தம்பி, அண்ணனின் வேதனையைப் பார்த்தவாறே எதிர்த் திசையில் ஓட முயலும்போது ஆங்காங்கே எரியாத திரைச் சீலைகள் கண்ணில் பட்டன. அவற்றை இழுத்தான். கால்களில் இறுக்கச் சுற்றிக் கொண்டான்.

கண்ணாடிச் சிதறல்களின் மீதேயே பயணப்பட்டான். திரைச்சீலைகள் சுற்றியிருந்ததால் பாதங்கள் பழுதாகவில்லை. தீக் கொழுந்துகளின் சிறிய சிறிய காயங்கள் தவிர, கால்கள் தப்பிவிட்டன.

குருஜி சொல்கிறார், ''ஒரு மனிதனின் வாழ்வில் வினைப் பயனாகிய நெருப்பு கொழுந்துவிட்டெறிய, அதன் காரணமாக கண்ணாடிச் சிதறல்கள் என்கிற துன்பங்கள் பரவிக் கிடக்கின்றன. திரைச் சீலை என்கிற குருநாதர் அருளை கவசமாகக் கொண்டுவிட்டால், துன்பங்களில் இருந்து மீண்டும் விடலாம்''.

ஆம். இதுதான் உண்மை. பாரததேசம் பரம்பரை பரம்பரையாய் குருமார்களின் பலமான அருளினாலேயே வாழ்ந்து வருகிறது, வாழையடி வாழையென வந்த மரபில். இன்று நாம் நம் கண்முன்னே நடமாடும் அம்பிகையாக அருளிவரும் ஸ்ரீஸகடபுரம் ஸ்வாமிகள் அவர்களின் திருவடிகளைப் பற்றிக் கொள்வோம். வினைப் பயன்களை அவர் ஏற்றுக் கொள்வார். பரிபூரணமாகச் சரணடைந்து, சுகமான வாழ்வு பெறுவோம்.

## சித்திரை மாத சிறப்புகள்

★ சிவகங்கை அருகே, கண்டமாணிக்க தலத்தில் உள்ள ஸ்ரீமாணிக்க நாச்சியம்மன் ஆலயத்தில் புதுமையாகக் கொண்டாடப்படுகிறது சித்திரைத் திருவிழா. இதன் நிறைவு நாளன்று, அம்மன் வீதியுலா வரும்போது ஆண்களும் பெண்களுமாக கூடி நின்று குடம்குடமாக பன்னீர் அள்ளித் தெளித்து வழிபடுகின்றனர். விழாவோடு விழாவாக மாப்பிள்ளை, பெண் பார்க்கும் படலமும் நடைபெறுவது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு ஆண்டும் பத்து– பதினைந்து திருமணங்களாவது நிச்சயமாகி விடுமாம்!

★ திருநெல்வேலி மாவட்டம், ஆழ்வார்குறிச்சி எனும் ஊருக்கு மேற்கே சுமார் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது ஸ்ரீஅத்ரிபரமேஸ்வரர் மலைக் கோயில். இங்கே, ஸ்ரீருத்ர விநாயகர் சந்நிதிக்கு பின்புறம் நெடிதுயர்ந்து நிற்கும் மரத்தை, அம்ருதவர்ஷிணி மரம் என்கின்றனர். சித்திரை மாதம் முழுவதும் இதன் கிளைகளில் இருந்து பன்னீர் துளிகள் போல தண்ணீர் சொட்டுவது, கலியுக அற்புதம்தான்!

# வாழ்வாங்கு வாழ ஆயுர்வேதம்

முனைவர் வேணுகோபால சர்மா

''न जलाप्लुतदेहस्य स्नानमित्यभिधीयते ।
स स्नातो यो दम:स्नात: शुचि:शुद्धमनोमल: ।।''

ந ஜலாப்லுததே$^{3}$ஹஸ்ய ஸ்நானமித்யபி$^{4}$தீ$^{4}$யதே ।
ஸ ஸ்நாதோ யோ த$^{3}$ம:ஸ்நாத: ஶுசி:ஶுத்$^{3}$த$^{4}$மனோமல: ।।

எனும் வசனத்தின்படி ஸ்நானத்தின் நோக்கம் உடற் அயற்வு, உடல் அழுக்கு முதலியவை நீக்குவது மட்டுமல்ல. மாறாக மன அயர்வும், மன அழுக்கும் நீங்கி புத்துணர்ச்சிப் பெற்று இறைவனைத் தொழுதேற்றி அனுஷ்டானங்கள் செய்து சித்த சுத்தி பெறுவதுதான் ஸ்நானத்தின் பரமப்ரயோஜனம். அவ்வித ஆத்மலாபங்களைப் பெறவேண்டி செய்யப்பட வேண்டிய ஸ்நானத்திற்கு சில வழிமுறைகள் உண்டு.

1) முன்தினம் கட்டிய வஸ்த்ரத்துடனும் காலை எழுந்திருந்த உடன் தந்தசுத்தி முதலியவைகளைச் செய்து அந்த வஸ்த்ரத்துடனேயே ஸ்நானம் செய்ய வேண்டும்.

2) சலித்த மண் அல்லது கோமயம் உபயோகித்துக் குளிக்க வேண்டும்.

3) ஸ்நானத்திற்கு முன் அன்றைய பஞ்சாங்கத்தைத் தெரிந்து கொண்டு ஸங்கல்பம் செய்து அம்ருதம் நிரம்பிய கங்கை முதலிய புண்ய நதிகளில் ஸ்நாநம் செய்வதாய் பாவித்துக் கொண்டு குளிக்க வேண்டும். ''அதிக்ரூர மஹாகாய'' எனும் ஶ்லோகத்தையோ, ''அகர்மஷணஸூக்த'' ஜபமோ செய்யலாம்.

4) குளித்தபின் மடி வஸ்த்ரம்தான் அணிந்து கொள்ளப்பட வேண்டும். இவை நான்கும் மிகவும் தேவை.

''ம்ருத்திகா'' தயாரித்தல் இன்றை காலகட்டத்தில் கேள்விப்படாத ஒன்று. ஆனால், வெளியூரில், "Mud Bath" என்பது ப்ரபலம். நல்ல வழவழப்பான ஆற்றுக்கரைகளிலேயே கிடைக்கக்கூடிய மண்ணை எடுத்து சலித்து காயவைத்து பொடித்து வைத்துக்கொண்டு, பௌளசம்

செய்துகொள்ளும் போதும், குளிக்கும்போதும் உபயோகப்படுத்துவது ஆசாரம் நிறைந்தவர்கள் செய்வதுதான். இன்றைக்கும் பரம்பரையாக வரும் மடங்களில் ஸ்வாமிகள் இவ்வாறுதான் தன்னுடலை தூய்மைப்படுத்திக் கொள்வார்கள்.

''मृत्तिके हन मे पापं यन्मया दुष्कृतं कृतम् ।
मृत्तिके ब्रह्मदत्ताऽसि काश्यपेनाभिमन्त्रिता ।।

मृत्तिके देहिमे पुष्टिं त्वयि सर्वं प्रतिष्ठितम् ।
त्वया हतेन पापेन गच्छामि परमां गतिम् ।। ''

**ம்ருத்திகே ஹன மே பாபம் யன்மயா து$^{3}$ஷ்க்ருதம் க்ருதம் ।**
**ம்ருத்திகே ப்ரஹ்மத$^{3}$த்தா'ஸி காஸ்யபேனாபிமன்த்ரிதா ।।**

**ம்ருத்திகே தே$^{3}$ஹிமே புஷ்டிம் த்வயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ।**
**த்வயா ஹதேன பாபேன க$^{3}$ச்ச$^{2}$ாமி பரமாம் கதிம் ।।**

என்றெல்லாம் வேதமே ம்ருத்திகா ஸ்நானத்தின் உயர்வை எடுத்து விளம்புவதால் ஆசாரஸீலர்களால் பாவிக்கப்பட வேண்டிய நல்ல பழக்கம் இது. இது அனைவராலும் கடைபிடிக்கப்பட வேண்டும்.

(தொடரும்)

## சித்திரை மாத சிறப்புகள்

★ சித்திரா பவுணர்மியன்று சிவபெருமானுக்கு வெண்பட்டாடை சமர்ப்பித்து பலாசமர மலர்களால் ஆன மாலையை அணிவித்து, பலாச மலர், மருக்கொழுந்து இலை ஆகியவற்றால் அர்ச்சிப்பது விசேஷம். சுத்த அன்னம் நிவேதனம் செய்ய வேண்டும். இந்த முறையில் சிவபூஜை செய்தால் லட்சுமி கடாட்சமும் சகல சவுபாக்கியங்களும் கிட்டும். சனீஸ்வர பகவான் கோவில்களில் தனியாக இருந்தே அருள்பாலிக்கிறார். ஆனால் கும்பகோணம் அருகே உள்ள திருநாரையூர் ராமசுவாமி கோவிலில் தன் மனைவிகளான மந்தா தேவி, ஜேஷ்டா தேவி குழந்தைகள் குளிகன், மாந்தி ஆகியோருடன் சனிபகவான் அருள்பாலிக்கிறார்.

# தெய்வீக மூலிகைகள்

மயிலை பாலா

### பச்சைப் பயிறு

**பு**தனுக்குப் பரிகாரமாக பாசிப்பயிறை ஏழைகளுக்குத் தானம் செய்யலாம். பாசிப்பருப்பின் மீது விளக்கு வைத்து புதன் கிரகத்தின் அருளை வேண்டி, நினைத்துக் கொண்டு, தீபம் ஏற்றலாம். பச்சைப் பயறு வேகவைத்து பசுமாட்டுக்கு வழங்கலாம். புறாக்களுக்குத் தீவனமாகக் கொடுக்கலாம்.

சந்யாசிகளின் உணவில் மற்ற பருப்புகளை விட பாசிப்பயிறே அதிகம் பயன்படுத்தப்படுகிறது. இது அவர்களுக்கு தேவையான சக்தியையும் மன சாந்நியையும் கொடுக்கிறது.

உபவாசமிருப்பவர்கள் ஏதேனும் ஒரு வேளை லகுவாக உணவேற்பதாயின் பயற்றங் கஞ்சித் தெளிவுடன் பாலும், சர்க்கரையும் சேர்த்து உண்பர். சீக்கிரம் ஜீரணமாவதுடன் உபவாச நிலையில் அதிகரித்துள்ள பித்தத்தின் சீர் கேட்டைத் தணிக்க இது பெரிதும் உதவும்.

அபர காரியங்களில் விசேஷமாக பச்சைப் பயிறே இடம் பெறுகிறது. ஹிரண்ய தானத்திலும் இது முக்கிய இடம் வகிக்கிறது.

திருக்கோயில் வைபவங்களில் முளைப்பாரி எடுத்தல் முக்கியமாக இடம் பெறும். இதில் இடப்படும் பல தான்யங்களில் பாசிப்பயிறும் இடம் பெறுகிறது.

திருமணங்களில் பாலி தெளித்தல் வைபவத்திலும் பச்சைப்பயிறு இடம் பெறுகிறது. அம்பிகைக்கு பாசிப் பயிறில் செய்த பாயசம் விசேஷமாக நிவேதிக்கப்படுகிறது. மேலும் இந்து சமய விழாக்கள் பலவற்றில் பக்ஷணங்கள் செய்ய பச்சை பயிறு மாவு பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

இனி இதன் மருத்துவ குணங்களைக் காண்போம்.

புன்செய் நிலங்களில் விளையக் கூடிய தானியங்களில் சிறந்த உணவுச் சத்துள்ளது பயறு. பயறுகள் பல மருத்துவ குணங்கள் கொண்டவை. பயறு வகைகளில் அமினோ புளிமங்களும் குறிப்பாக லைசின் மிக அதிக அளவுகளில் காணப்படுகின்றது. பயறு வகைகளில் அதிகமாக வைட்டமின் பி காம்ப்ளெக்ஸ், ரிபோபிளேவின் அதிகம் அடங்கியுள்ளது. எனவே, பயறு வகைகள் வைட்டமின் பி பற்றாக்குறையை தவிர்த்திடும். பச்சை பயறு மற்றும் தட்டைப்பயறில் புரதச்சத்துக்கள் மிகுந்து காணப்படுகிறது. அதை அப்படியே பயன்படுத்துவதை விட, முளைக்கட்டி பயன்படுத்துவதன் மூலம் நல்ல பயன் கிடைக்கும். முளைக்கட்டிய பயறில் வாயுத்தன்மை என்னும் குறைபாடுகளை உண்டுச்செய்யும் தன்மைக்கிடையாது. எளிதில் செரிமானமும் ஆகும். பயறுகள் முளைவிடும் தருவாயில் அஸ்கார்பிக் அமிலமான வைட்டமின் சி அதிகம் காணப்படுகின்றது. முளைக்கட்டிய பயறுகளில் பிற வைட்டமின்களும் கூடுதலாகக் காணப்படுகின்றன. இவை முளை வளர வளர கூடிக் கொண்டே போகிறது. முளைக்கட்டிய பயிறை அப்படியே பச்சையாகவே சாப்பிடலாம். பச்சை வாசனை பிடிக்காதவர்கள் ஆவியில் 5 நிமிடம் வேக வைத்து பின்னர் வெல்லம்/சர்க்கரை இட்டும் சாப்பிடலாம். வெந்த பயறை கூட்டு, பொரியல் ஆகியவற்றிலும் சேர்த்து உண்ணலாம்.

கால்சியம், பாஸ்பரஸ், இரும்புச்சத்து போன்ற சத்துக்களும், தியாமின், நியாசின் போன்ற வைட்டமின்களும் பாசிப்பயிறில் கூடுதலாகும். 100 கிராம் பயறில் 24.5 கிராம் புரதம், 140 மிகி. கால்சியம், 30 மி.கி. பாஸ்பரஸ், 8.3 மி.கி. இரும்புச்சத்து, 0.5மி.கி. தயாமின், 0.3மி.கி. ரிபோபிளேவின், 2.0மி.கி. நியாசின் போன்றவை உள்ளது. சராசரியாக பயறு வகைகளில் 345 கிலோ எரி சக்தியும் உள்ளன.

(தொடரும்)



# சக்தி தரிசனம்

ஸ்ரீமதி ரஞ்சனா பாலசுப்ரமணியன்

## ஸ்ரீ காமாட்சி

லக்ஷ்மி என்றாலே மங்களம். அரூப லக்ஷ்மியை மனதால் தியானித்தாலே போதும். பதினாறு செல்வங்களும் பறந்தோடி வரும்.

ஒரு சமயம் ஸ்ரீ மகாவிஷ்ணுவும் ஸ்ரீ லக்ஷ்மியும் பேசிக் கொண்டிருக்கும்போது, லக்ஷ்மி, விஷ்ணுவை பலவாறாகப் பரிஹாசம் செய்கிறாள். மந்தகாஸத்துடன் விஷ்ணுவும் அதனை ரஸித்து வருகையில் சற்றே எல்லை மீறிய அம்பிகை, 'மோஹினி ரூபமெடுத்த நீங்கள் சிவனையும் கூட மயக்கியது உண்மைதான், அது உங்கள் மாயா சக்தியால் செய்த தந்திரமே தவிர, ரூப லாவண்யத்தால் அல்ல. எது எப்படியாகிலும் நீங்கள் கருப்பு நிறத்தவர் தானே, உம்மீது யார் ப்ரேமை கொள்ள முடியும்' என்று ஏளனம் செய்கிறார்.

இந்த பதிலைக் கேட்ட விஷ்ணு கோபம் கொண்டார். விளையாட்டு வினையாகியது. 'ரமா என்று இன்பமே உருவானவளாகக் கூறப்பட்ட நீ இன்று உனது வாக்கால் துன்பத்தை தேடிக் கொள்கிறாய். உன்னுடைய அதி சௌந்தர்யம் உனக்கு கர்வத்தை உருவாக்கியிருக்கிறது. இப்போதே நீ குரூபியாகி மண்ணுலகில் வாசம் செய்வாயாக' என்று லக்ஷ்மியை சபித்து விடுகிறார்.



தன் தவறை உணர்ந்த தேவி, அவர் பாதத்தில் வீழ்ந்து மன்னிக்க வேண்டு கிறாள். 'நீ காஞ்சி காமகோடியில் வாசம் செய்து காமாக்ஷியைத் துதித்து வா. அவளருளால் நீ மீண்டும் என்னை அடைவாய்' என்று கூறுகிறார். அதன்படி, காஞ்சிக்கு சென்று காமாக்ஷியை தியானித்து கடும் தவத்தில் ஆழ்ந்தாள்.

கறுத்த நிறத்துடன் களையிழந்து தன் அழகைத் தொலைத்த மகாலக்ஷ்மிக்கு காட்சி தந்த காமாக்ஷி, அவளை அஞ்சன காமாக்ஷி என அழைத்தாள். 'கணவனின் மனம் கோணும்படி மனைவி நடந்து கொள்ளக் கூடாது என்பதை உலகம் அறிந்து கொள்ளத்தான் இச்சம்பவம் நடந்தது. எனக்கு இடப்பக்கம் நீ இந்த வடிவிலேயே இரு. என்னை வழிபடும் பக்தர்கள் என் குங்குமப் பிரசாதத்தை உன் திருமேனி முழுவதும் தடவி பின் இட்டுக் கொள்வார்கள். நீயும் சாப விமோசனம் பெற்று, மறுபடியும் உன் தோற்றப் பொலிவைப் பெறுவாய். அந்த அழகு வடிவத்தில் சௌந்தர்ய லக்ஷ்மியாய் என் வலப்பக்கம் அருள்வாய். பக்தர்கள் உன் பாதங்களைத் தொடும் பாக்யத்தை அடையட்டும். அவர்களுக்கு நீ சகல செல்வங்களையும் அருள்வாயாக' என திருவாய் மலர்ந்தருளினாள். அதன்படியே சாபவிமோசனம் பெற்று தங்க நிறம் கொண்டாள் மகாலக்ஷ்மி. அந்த சௌந்தர்ய லக்ஷ்மியை நாம் காஞ்சி காமாக்ஷி திருக்கோயிலில் அம்பிகையின் வலப்புற கோஷ்டத்தில் தரிசிக்கலாம்.

(தொடரும்)

**சித்திரை மாத சிறப்புகள்**

★ அவிநாசியில் பதினொரு நாட்கள் சித்திரை மாதத்தில் காலையும் மாலையும் பிரம்மோற்சவம் நடைபெறும். ஆதியில் பிரம்மதேவன் அவிநாசியப்பருக்கு உற்சவம் நடத்தி வைத்ததாக ஐதீகம். ஏழாம் நாள் தேரோட்டத்தில் விநாயகர், சுப்பிரமணியர், அம்மன், சண்டேசுவரர், முருகநாதர், அரிவரதராஜப் பெருமாள் ஆகியோருக்கும் தேர் உண்டு. தமிழ்நாட்டில் உள்ள மிகப்பெரிய தேர்களில் அவிநாசி தேரும் உண்டு.

★ சித்ரா பவுர்ணமியன்று விழுப்புரம் அருகில் உள்ள கூத்தாண்டவர் கோவிலில் அரவாணிகளுக்காக (திருநங்கை) விழா நடைபெறும். அன்று இந்தியாவில் உள்ள திருநங்கைகள் அங்கு ஒன்று கூடுவர்.

# திருமூலர் திருமந்திரம்



மனிதனாகப் பிறந்தவர்கள் அனைவருக்கும் பொதுவானது பசிப்பிணி. அப்புறம் உடற்பிணி. பசிப்பிணிக்கு மூன்றுநேர உணவு வேண்டும். (சிலருக்கு ஐந்துவேளை கூட இருக்கும்). அதனைத் தீர்த்து விடலாம். உடற்பிணிக்கு மருத்துவர்களை நாடிட வேண்டும். தீரும். . . வரும். . . தீரும். . . வரும். . . வினைப் பயனைப் பொறுத்தது.

ஆனால் நம்மால் தீர்க்க இயலாத பிணி ஒன்று உள்ளது அதுதான் பிறவிப்பிணி.

''அல்லல் பிறவி அறுப்பானே. . .'' என்பார் மாணிக்க வாசகர்.

பிறவித் தளையைப் போக்குவது அத்தனை சுலபமல்ல. பல்வேறு கீழ்நிலைகளிலிருந்து விடுபட்டு மனிதப் பிறவிக்கு வருகின்றோம்.

ஆனால், மனிதப் பிறவியை உணராமல் மீண்டும் மீண்டும் வினைச் சூழலில் மாட்டி, இல்லை இல்லை . . . வினைச் சூழலில் மாட்டி சிக்கித் தவிக்கின்றோம்.

எனவேதான் யோகிகளும் ஞானிகளும் பிறவி வேண்டாம் என அலறுகின்றார்கள்.

**''இனி ஒருதாய் கருப்பையூர்**
**வாரா மற் கா''** என்பார் பட்டினத்தடிகள்.

**''பிறவாமை வேண்டும்**
**மீண்டும் பிறந்தால் உன்னை**
**மறவாமை வேண்டும்''** என்பார் காரைக்கால் அம்மையார்.

**''என்புபெறாத இழிபிறவி எய்திடினும்**
**நின் அன்பு வேண்டும்''**
என்பார் பிரகலாதன் வாயிலாகக் கம்பர்.

ஆதாலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே ! என்பார் ஆழ்வார். இப்படிப் பலப்பல பிரார்த்தனைகள் ஏராளம்.

பிறவிப் பிணியைத் தொலைக்கவே இந்த மானிடப் பிறவி. பகுத்தறிவு, பகுத்தறிவு என்கிறோமே, அது எதற்காக என்று கேட்டால் பிறவியற்றுப் போவதற்கான முயற்சிதான்.

அப்பர் சுவாமிகள் பதறுவார் -

**''பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றாரே !''** என்று.

பிறவிச் சூழலில் இருந்து விடுபட கர்ம வினைகளைக் குறைக்க வேண்டும். வருவதை ஏற்றுக் கொள்ள வேண்டும். வினை காரணமாக நமக்கு ஊறு செய்பவர்களைக் கண்டிக்கக்கூடாது. அதுதான் தவம் என்பார் திருமூலர்.

**''உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை**
**அற்றே தவத்திற்கு உரு''**

அருள்நூலாகிய திருமுறைகளையும், வேத ஆகமங்களையும் அருட்கண்ணோடு கற்று உணராதவர்கள் நோன்பு நோற்றுத் தவம் புரிய மாட்டார். அவ்வாறு செய்வதற்கு அஞ்சி விலகுபவர்கள் பிறப்பென்னும் பெருந்துன்பத்திற்கு ஆட்படுகின்றனர். பிறப்பு, இறப்பிற்கு அச்சமில்லாத இவர்கள் மீண்டும், மீண்டும் பிறந்து சோற்றுக்கு அலைகின்றனர்.

இவர்களது நிலை எவ்வாறு இருக்கின்றது என்றால் ஆற்றில் கிடக்கின்ற முதலைக்கு அஞ்சி, அதனிடமிருந்து தப்ப காட்டில் வாழும் குட்டிபோட்ட கரடியிடம் அகப்பட்டது போலாகும்.

முழுமுதற் கடவுளாம் சிவனை வேண்டிப் புரிகின்ற அழிவில்லாத பெருந்தவமும், நோன்பும் இன்பமெனக் கொண்டு இடையறாது தொழுகின்ற உண்மை அன்பர்களைப் பிறவித் துன்பம் அணுகாது.

திருமூலர் அருளுகின்றார் -

**ஆற்றில் கிடந்த முதலைகண்டு அஞ்சிப் போய்**
**ஈற்றுக் கரடிக்கு எதிர்ப்பட்டது ஒக்கும்**
**நோற்றுத் தவஞ் செய்யார் நூலறியாதவர்**
**சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே !**

**(திருமந்திரம் 1442)**

# பஜகோவிந்தம் விளக்கவுரை

திரு. ந. ஸ்ரீநிவாசன்

**நாடுவதில் உண்டு நலமே . . .**



**து**றவு என்பது ஒரு உயர்ந்த நிலை. அது வெறும் வெளிவேஷத்தால் மட்டும் அறியப்படுவதில்லை. அகத்தாலே துறத்தலே அவசியம்.

உலகம் எவற்றையெல்லாம் பழிக்கின்றதோ, எவற்றையெல்லாம் வேண்டாம் என்று ஒதுக்குகின்றதோ, எவற்றையெல்லாம் தர்மத்திற்கு புறம்பானது என்று மொழிகின்றதோ அவற்றையெல்லாம் விட்டுவிட வேண்டும். அதுவே உண்மையான துறவு. அதனை விட்டு தாடி வைத்துக் கொள்வதோ, அல்லது மொட்டை அடித்துக் கொள்வதோ துறவு ஆகாது என்பார் வள்ளுவப் பெருந்தகை.

**மழித்தலும நீட்டலும் வேண்டா உலகம்**<br>
**பழித்தது ஒழித்து விடின்.** என்பது குறள்.

**உடலாலே செயல்படுதல் கர்மயோகம்**<br>
**உள்ளத்தால் செயல்படுதல் ஞானயோகம்**<br>
**திடமான ஆன்மாக்கள் துறவு காண்பார்**<br>
**திடமில்லார் எப்போதும் செய்கை காண்பார்**<br>
**வடமென்றும் இடமென்றும் இரண்டு பக்கம்**<br>
**இருப்பதுவோ செயல் ஒன்று ! துறவு ஒன்று**<br>
**கடமையென எதைச் செய்த போதும் வாழ்வில்**<br>
**கடவுள்நிலை கிட்டுமெனக் கண்ணன் சொன்னான்**

என்பார் கவியரசர் கண்ணதாசன் பகவத்கீதை மொழிபெயர்ப்பில்.

'திடமான ஆன்மாக்கள் துறவு காண்பார்' என்னும் வரிதான் எத்தனை அழகு. எத்தனை ஆழம். துறவு நெறி காண்பதற்குப் பெரிதும் அவசியம் திடமான நெஞ்சு. உறுதிப்பாடு. அதுதான் வைராக்கியம்.

ஒருவன் மனைவியோடு கோபித்துக் கொண்டு துறவறம் மேற்கொள்ளப் போனான். அப்போது வீட்டைவிட்டு வெளியேறும் போது வீட்டுத் திண்ணையில் ஒரு பித்தளைச் செம்பு இருந்தது. தனது

மனைவியைக் கூப்பிட்டுச் சொன்னான். ''அடியேய்! செம்பை எடுத்து உள்ளே வை''.

மனைவி கேட்டாள், ''எல்லாம் துறந்து வீட்டைவிட்டு வெளியே போகிறவனுக்கு செம்பு திண்ணையில் இருந்தால் என்ன ? வீட்டுக்குள் இருந்தால் என்ன ? போய்யா. . . போ. . . என்றாள்.

துறத்தல் என்பது அத்தனை சுலபமல்ல. நம்மால் ஒரு நேரக் காப்பியைக் கூட விடமுடியவில்லை. சிறிது நேரம்கூட மின்விசிறியை விட்டு இருக்கமுடியவில்லை.

**காடே திரிந்தென்ன ? காற்றே புசித்தென்ன ?**
**கந்தை சுற்றி**
**ஓடே யெடுத்தென்ன ? உள்ளன்பிலாதவர்**
**ஓங்கு விண்ணோர்**
**நாடே இடைமருதீசர்க்கு மெய்யன்பர்**
**நாரியர் பால்**
**வீடே இருப்பினும் மெய்ஞ்ஞான**
**வீட்டின்பம் மேவுவரே !** என்பார் பட்டினத்தடிகள்.

உள்ளத்தில் அன்போடு ஈசனை வழிபாடு செய்தல் வேண்டும். அதனை விடுத்துக் காட்டில் திரிந்தால் என்ன ? காற்றினைப் புசித்தால் என்ன ? கந்தைகளைச் சுற்றிக் கொண்டு ஓட்டினைக் கைகளில் ஏந்திக் கொண்டு வீதிதோறும் சுற்றினால் என்ன ?

உண்மையான அன்புடையவர்கள் இல்லறத்தில் இருந்தாலும் சிறந்தவர்களே என்பார் பட்டினத்தடிகள்.

இதனையே ஸ்ரீஆதிசங்கரர் அருளிச் செய்கிறார்.

**ஜடிலோ முண்டி லுஞ்சித கேச:**
**காஷாயாம்பர-பஹுக்ருத-வேஷ: ।**
**பச்யந்நபி ந பச்யதிமூட:**
**உதர நிமித்தம் பஹுக்ருத-வேஷ: ।।**

சடை தரித்தவனோ, தலை மழித்தவனோ, கேசத்தைக் கத்தரித்துக் கொண்டவனோ, காவித்துணியால் வெகுவாய் வேஷம் போட்டவனோ எவனாய் இருந்தாலும் மதியில்லாதவன் பார்த்தும்

பார்ப்பதில்லை. வெகுவாக வேஷமெல்லாம் வயிற்றின் பொருட்டே ஆகிறது. கவியரசர் கண்ணதாசன் அழகுத் தமிழில் தருகிறார் -

**காவியுடை மொட்டையொடு**
**கையிலொரு பாத்திரமும்**
**காட்டுவது என்ன துறவோ ?**

**கண்ணியமும் இல்லை அதில்**
**புண்ணியமும் இல்லை வெறும்**
**கட்டைகளின் வேஷமல்லவோ!**

**கோவணமும் நீள் சடையும்**
**கோஷமிடும் வாய்மொழியும்**
**கோமுனிவன் ஆக்கிவிடுமோ ?**

**குப்பியை நிரப்பவொரு**
**செம்பு சுமப்பார் அவர்க்குக்**
**கோவிந்தன் காட்சி வருமோ!**

**நம்பியவன் நன்னெறியும்**
**நல்வழியும் நல்லுறவும்**
**நாடுவதில் உண்டு நலமே!**

**நாத்திகரைக் கூடவொரு**
**தோத்திரம் படிக்க வைத்த**
**நாயகனைப் பாடு மனமே!** (பாடல் - 14)

வளரும்

### சித்திரை மாத சிறப்புகள்

★ வேலூர் மாவட்டம் திருவல்லத்திலிருந்து கிழக்கே மூன்று கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது கஞ்சன் மலை. இங்கு சுயம்பு லிங்கமான வில்வநாதீஸ்வரர் எழுந்திருயுள்ளார். இத்திருத்தலத்தில் சித்திரா பவுர்ணமி அன்று இரவு பதினொரு மணிக்கு மேல் பன்னிரெண்டு மணிக்குள் வட திசையில் முதலில் மூன்றடி உயரத்தில் ஜோதி தெரிகிறது. பிறகு கொஞ்சம் கொஞ்சமான வளர்ந்து பதினெட்டு அடி உயரம் வரை அகன்று விரிந்து விஸ்வரூபம் எடுத்து மறைந்துவிடும் அதிசயத்தைத் தரிசிக்கலாம் என்று தலபுராணம் கூறுகிறது.



# ஸ்ரீபாத ஸப்ததி

ஸ்ரீநாராயண பட்டத்ரி

डोलाकेलिविधौ हिमाचलशिलादेशे समभ्याहतात्
पादाग्रात्तवयानि यावकरसप्रस्यन्दनान्यम्बिके ।
तान्यभ्यागतशुम्भसङ्गरभवद्रक्ताम्बुविस्तारणा-
बिन्दुक्षेपनिभानि नन्ददमरीवन्द्यानि वन्दामहे ॥ ३०

டோ[3]லாகேலிவிதௌ[4] ஹிமாசலஶிலாதே[3]ஶே ஸமயப்[4]யாஹதாத்
பாதா[3]க்[3]ராத்தவயானி யாவகரஸ ப்ரஸ்யந்த[3]நான்யம்பி[3]கே ।
தான்யப்[4]யாக[3]தஶும்ப[4] ஸங்க[3]ர ப[3]வத்[3]ரக்தாம்பு[3] விஸ்தாரணா-
பி[3]ந்து[3]க்ஷேபநிபா[4]னி நந்த[3]த[3]மரீவந்த்[3]யானி வந்தா[3]மஹே ॥

தேவீ! கற்கள் நிரம்பிய இமயமலையில் ஆனந்தமாக நீ ஊஞ்சலில் விளையாடிக் கொண்டிருக்கும்போது, உன் திருப்பாதங்கள் அக் கற்களில் உராய்வதால், உன் பாதங்களில் பூசப்பட்டிருக்கும் சிவப்புப் பூச்சிலிருந்து சில துளிகள் அந்த கற்களின் மீது தெறித்து விழுகின்றன. அந்த கற்களின் மீது தெறித்து விழுந்த அந்த துளிகளை நாங்கள் வணங்குகிறோம்.

தேவலோகத்து பெண்களும் மிகுந்த மன மகிழ்வுடன் அவைகளுக்கு வணக்கம் செய்கின்றனர். ஏனென்றால், அத்துளிகள் பின்னாளில் போர்களத்தில் ஓடப்போகும் சும்பனின் ரத்த துளிகளுக்கு முன்னோடியாக அவை விளங்குகின்றன.

அம்பிகை தன் சிவந்த திருப்பாதங்களில் செந்நிற நலங்கு இட்டுக்கொண்டு ஆனந்தமாக ஊஞ்சலில் ஆடும்போது அவள் திருப்பாதங்களிலிலிருந்து சில துளிகள் பெயர்ந்து விழுகின்றன. அவை சிவப்பாக இருப்பதால், மலை கற்களின் மீது விழுந்த அந்த சிவப்புத்துளிகள் பின்னாளில் சும்பன் என்ற அசுரன் அம்பிகையின் திருக்கரங்களால் வதைபடும்போது அவன் உடலிலிருந்து விழும் ரத்தத் துளிகளை இவை ஞாபகப்படுத்துவதாக ஸ்ரீ நாராயண பட்டத்ரி குறிப்பிடுகிறார்.

## சங்கடங்கள் போக்கும் சண்டிகா தேவி

சண்டிகா தேவி கோவில் ஹரித்வாரைச் சுற்றிக் காணப்படும் குன்றுகளில் ஒன்றான நீலபர்வதம் என்னும் குன்றின் மேல் இருக்கிறது. துர்கையின் வடிவான இந்த தேவியை தரிசித்து நம் மனதில் நினைத்து வேண்டுகோளை நிறைவேற்றித் தரும்படி அவளிடம் பிரார்த்தனை செய்தால் நிச்சயமாக நினைத்ததை நிறைவேற்றித் தருவாள்.

உயர்ந்த குன்றின்மேல் இருக்கும் இந்தக் கோயிலுக்குச் செல்ல கம்பி வழியாகச் செல்லும் கூண்டுப் பெட்டிகள் உண்டு. தரைமட்டத்தில் இருந்து ஐந்து நிமிடத்தில் சண்டி தேவி கோயிலுக்குச் சென்று விடலாம். குன்று தோறும் இருக்கும் குமரன் ஆலயம் காணச் செல்வதைப்போன்ற புதிய அனுபவம்.

பயமாக இருந்தாலும் கம்பி வழியாகச் செல்லும் கூண்டுப் பெட்டியில் அமர்ந்து கீழே தெரியும் ஹரித்வாரின் ஸ்நான கட்டம், இதர கோயில்கள், புனித கங்கை ஆகிய கண் கொள்ளாக் காட்சிகளைக் காண கண் கோடி வேண்டும்! மனதால் நினைக்கும் போதே ஆனந்தமாக இருக்கிறது.

மிகவும் சக்தி வாய்ந்த சிறிய திருக்கோயில். இந்த கோயிலில் உள்ள தேவி ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாக கூறப்படுகிறது. இத்திருக்கோயில் சித்தர் பீடங்களில் ஒன்றாகும்.

முன்னொரு காலத்தில் சும்பன், நிசும்பன் என்ற அரக்கர்கள் இந்திரலோகத்தைக் கைப்பற்ற, அவர்கள் பார்வதியிடம் பிரார்த்தனை செய்ய, பார்வதி தேவி மிகவும் அழகும் சக்தியும் வாய்ந்தவளாக சண்டி தேவியைப் படைத்து, அசுரர்களை அழிக்க ஆணையிட்டாள். அவள் சும்பன், நிசும்பனை அழித்து இந்திரனுக்கும், தேவர்களுக்கும் தேவலோகத்தை மீட்டுத் தந்தாள். இந்த சம்பவம் நிகழ்ந்த பின்னர் அம்பாள் இந்தக் குன்றில் சிலகாலம் தங்கியிருந்தாள், ஆதிசங்கரர் இவ்விடத்திற்கு வந்த போது தேவியின் அம்சம் இந்த இடத்தில் காணப்படுவதை உணர்ந்து தேவியின் திருவுருவம் ஒன்றை பிரதிஷ்டை செய்தார், என்றும் கூறப்படுகிறது. சுங்கடங்கள் நீக்கும் இச் சண்டிகா தேவியை வணங்கி வரம் பல பெறுவோம்!



# திருவிடைக்கழி திருமுருகன்...
## (மாதம் ஒரு தலம்)

திரு. ந. ஸ்ரீனிவாசன்

**பாரனைத்தும் பொய்யெனவே**
**பட்டினத்துப் பிள்ளையைப் போல**
**யாரும் துறக்கல் அரிது...** என்பார்கள்.

நொடிப் பொழுதில் துறந்தார் பட்டினத்தார். பெருஞ்செல்வம் என்ன செய்வது இதனை? என்று கேட்டார் தலைமைக்கணக்கர் சேந்தனார். எல்லாவற்றை அள்ளிக் கொடுங்கள் என்று சொல்லி விட்டுதிரும்பிப்பாராமலேயே பட்டினத்தார் சென்றுவிட்டார்.

சேந்தனார் எல்லாவற்றையும் அள்ளிக் கொடுத்துவிட்டார். இதனைக்கேட்டு வெகுண்ட சோழமன்னன் சேந்தனாரைச் சிறையில் அடைத்தான். சேந்தனார் குடும்பமே பட்டினத்தாரீன் பாதங்களின் விழுந்து காப்பாற்ற வேண்டி நின்றது.

பட்டினத்தாரும் விநாயகப்பெருமானை வேண்டிட, அவர் தம் தும்பிக்கையை சிறைக்கதவு வரை நீட்டி, கம்பிகளை உடைத்து வெளிக் கொணர்ந்த அதிசயத்தினை நாடே வியந்து பாராட்டியது.

நாடும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம் என்று காட்டிற்கு வந்து விறகு, வெட்டிப்பிழைத்தார் குடும்பத்துடன், நடராஜப்பெருமானுக்குக் களிபடைத்து அன்புடன் நிவேதனம் செய்தார். இவர் வீட்டில் செய்த பூஜை சிதம்பரம் ஆலயத்தில் மணத்தது. இறைவன் சந்நிதியெங்கும் களி பரவிக் கிடந்தது.

இவரது பெருமை உலகிற்கு உணர்த்த விரும்பிய ஆடல் வல்லான் ஒருமுறை ரதத்தில் ஏறியவுடன் ரதத்தை (தேரை) நகரவிடாமல் செய்தார். அந்தக் கூட்டத்தில் சேந்தனாரும் இருந்தார். ஒரு அன்பர்மேல் ஆவேசம் வந்து சேந்தனார் பாடினால் தேர் ஓடும் என்றார். எல்லோரும் சேந்தனாரைக் கண்டுபிடித்து பாடச் சொன்னார்கள். அவர் திருப்பல்லாண்டு பாட தேர் அசைந்து ஓடியது.

இத்தகைய பெருமைமிக்க சேந்தனாரை ஆட்கொண்ட தலம் திருவிடைக்கழி ஆகும்.

சூரனை அழித்ததால் உண்டான பிரம்மஹத்தி தோஷம் நீங்கிட முருகப் பெருமான் இங்குள்ள குரா மரத்தடியில் எழுந்தருளி, சிவலிங்க பூஜை செய்து, தோஷம் நீங்கப் பெற்று, தந்தையின் காட்சி கிடைக்கப் பெற்றார். கையில் வேலும், காலில் வீரக்கழலும், கொண்டு காட்சி தரும் முருகப்பெருமானைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். பிரம்மாண்டமான மூலவருக்கு அருகில் ஸ்படிகலிங்கத்தையும் காண முடிகிறது.

ஏழுநிலை ராஜகோபுரத்துடன் பிரம்மாண்டமாகத் திகழ்கிறது சுப்ரமணிய ஸ்வாமி ஆலயம் முன்னதாக கோயிலுக்கு எதிரே விநாயகர் தனிச்சந்நிதியில் எழுந்தருளியுள்ளார். பிரம்மஹத்தி தோஷம் நீங்கபூஜை செய்ய வந்த சூழலில் விநாயகரை மறந்துவிட, பிறகு உணர்ந்து விநாயகப்பெருமான் மீது ஐநூறு பாடல்களை முருகப்பெருமான் பாடித் துதித்தார். எனவே இவருக்கு ஐநூற்றுப் பிள்ளையார் என்னும் திருநாமம் சிறப்பாக ஏற்பட்டது.

முருகப் பெருமான் குரா மரத்தடியில் வழிபாடு செய்த சிவபெருமானுக்கு ஸ்ரீ பாவநாசப் பெருமான் என்னும் திருநாமம்.

மேலும், தவத்தில் மகிழ்ந்த ஈசன் தனக்கு உண்டான முன்னுரிமையையும் வழங்கியருளினார். வேறு எந்தத்தலத்திலும் இல்லாதபடி ஆலயத்தின் கருவறையில் நின்ற கோலத்தில் காட்சி தரும் முருகப்பெருமான், சந்நிதிக்கு உள்ளே உபகருவறையில் பிரம்மாண்டமான சிவலிங்கத் திருமேனியுடன் காட்சி தருகிறார் சிவபெருமான்.

திருமால், பிரம்மா, வசிஷ்ட மஹரிஷி சேந்தனார் வழிபட்ட பெருமைமிகு தலமிது. அருணகிரிநாதர் திருப்புகழ் உடைய பெருமையுடைய தலமிது.

ஒருமுறை முசுகுந்த சக்ரவர்த்தி இந்தத் தலத்திற்கு வந்தபோது அவருக்காக வைத்திருந்த பாலை, முதியவராக முருகப்பெருமான் வருகைதந்து எடுத்துச் சென்று சிவலிங்கத்திற்கு அபிஷேகம்

செய்தராம். இதனை உணராமல் ஆத்திரம் அடைந்த முசுகுந்த சக்ரவர்த்தி முதியவரைத் தேடி ஓடியபோது, மகிழ வனத்தில் குராமரத்தடியில் லிங்கத்தைக் கண்டு சிலிர்த்துப் போன மன்னன் முருகப் பெருமானுக்கும், ஈசனுக்கும் சேர்த்து ஆலயம் எழுப்பியதாக தலவரலாறு பேசுகிறது.

இந்த ஆலயத்தில் பிரதோஷ காலத்தில் உற்சவரான இரண்யாசுர சம்ஹாரமூர்த்தியாக எழுந்தருளும் முருகப்பெருமான் மயில் மீது உலா வருகிறார். ஒரு திருக்கரத்தில் வேலும், இன்னொரு திருக் கரத்தில் அம்புமாக சம்ஹாரக் கோலத்தில் முருகப்பெருமானை தரிசித்தால், அனைத்து பயங்களும் நீங்கும் என்பது அனுபவ உண்மை.



இந்தத் தலத்தில் வள்ளிக்கு சந்நிதி இல்லை. ஸ்ரீ தெய்வானை தான் இங்கே நாயகி. சம்ஹாரம் முடித்து பிரம்மஹத்தி தோஷம் நிவர்த்தியாகி முருகப்பெருமான் எப்போது வருவார் என வழி மேல் விழிவைத்துக் காத்திருக்கும் பாவனையில், சற்றே தலை சாய்த்து, மெள்ளத் திரும்பியபடி முருகப்பெருமான் வரும் திசைநோக்கி தெய்வானை அம்மையார் காத்திருக்கும் காட்சியே கொள்ளை அழகு.

எனவே இந்தத் தலத்திற்கு வந்து தெய்வானை சமேதரான முருகப்பெருமானை வழிபாடு செய்தார் திருமணம் விரைவில் கூடும் என்பது பக்தர்களின் நம்பிக்கை. உண்மையும் கூட.

பிரம்மஹத்தி தோஷத்தை முருகப்பெருமானுக்கே நீக்கிய அருளிய திருத்தலம். திருமண யோகம் கூட்டி வைக்கும் திருவிடைக்கழி திருத்தலம் வந்து வணங்கி வழிபட்டு வாழ்வில் வளம்யாவும் பெறுவோமாக.

### இருப்பிடம்

நாகை மாவட்டத்தில் திருக்கடையூர் தலத்திற்கு
5 கி.மீ. தொலைவில் உள்ளது.



# முன்வினைப் பயன்

ஸ்ரீ க்ருஷ்ண ஶர்மா

## உமா - மஹேஶ்வர ஸம்வாதம்

''பகவானே ! ஈஶ்வரரே ! பூதங்களை காப்பவரே ! உமக்கு நமஸ்காரம். தேவரே ! மனிதர்களில் சிலர் சிறிய உறுப்பு உள்ளவர்களாகவும், கோணலுறுப்புள்ளவர்களாகவும், ஒற்றைக்கை, நொண்டிகளாகவும், குள்ளமாகவும், கூனர்களாகவும் காணப் படுகின்றனரே, அது எந்த கருமத்தின் பயன் ? அதனை எனக்குச் சொல்வீராக !'' என உமாதேவி வினவ ,

மஹேஶ்வரர்:- ''தேவியே ! சிறந்தவளே ! முன்ஜன்மத்தில் பொருளாசையினால் மதிகெட்டு தானிய வ்யாபாரம் செய்யும் பொழுது, அளவுகளையும் விலையையும் வித்யாஸப் படுத்தியுமிருந்த மனிதர்களும், கோபத்தினால் மற்றவரை அங்கஹீனம் செய்தவர்களும், ஸத் விஷயத்தை அறியாதவர்களும், இவ்வாறாக நடத்தையுள்ள மனிதர்கள், பின் ஜன்மத்தில் உறுப்புகள் குறைந்தவர்களும் பிறவிக் கூனர்களுமாகின்றனர்'' என்று சொன்னார்.

மனிதர்களுள் சிலர், பித்துபிடித்து, பேய்பிடித்து, புத்திஸ்வாதீனம் இல்லாதவர்கள் எந்த கர்மத்தின் பயன் ? அதனை எனக்குச் சொல்லக் கடவீர் என்று கேட்டார். மஹேஸ்வரர், தேவியே ! சிறந்தவளே ! கேள். பூர்வ ஜன்மத்தில் கர்வமும், நான் என்கிற அஹங்காரமும் இருந்து பிறரைப் பலவிதமாக பேசியும், நகைத்தும், பெரியவர்களையும், ஶாஸ்த்ரங்கள் கற்றுணர்ந்த வித்வான்களையும் வீணாக பரிகாசம் செய்த மூர்க்கர்களும் பின் ஜன்மத்தில் பித்தரும் பேயுமாக (பைத்தியம் போல்) ஆகிறார்கள் என்பதில் ஸந்தேஹமில்லை'' என்று சொன்னார்.

உமாதேவி ! ''பலவிதமாக ப்ரார்த்தனை செய்தும், ஸந்ததியில்லாமல் (குழந்தைபேறு இன்றி) மிகவும் துயரப்படுகின்றவர் எந்த கர்மத்தின் பலனால் ?'' என வினவ ,

மஹேஸ்வரர் கூறுகிறார், ''தயைமில்லாமலும், ஸ்ரீஸூஹத்தி செய்தும், ம்ருகங்களையும், பக்ஷிகளையும் சாப்பிட்டுக் கொண்டும், ஶாஸ்த்ரங்கள் சொன்னபடி ஶ்ராத்த கர்மாவை செய்யாமலும் பித்ருக்களை பூஜிக்காமலும் இவ்வாறாக பின்ஜன்மாவில் மானிட பிறவி அடைந்த பொழுது ஸந்ததியில்லாமல் புத்ரசோகத்தோடும் இருக்கிறார்கள்.

(தொடரும்)

## சித்திரை மாத சிறப்புகள்

★ மற்ற எல்லா பவுர்ணமிகளை காட்டிலும் மிகவும் சிறப்பு வாய்ந்த சித்ரா பவுர்ணமியன்றுதான் இறைவன் புரிந்த அறுபத்து நான்கு திருவிளையாடல்களில் முதல் திருவிளையாடல் நடந்தது. இன்று இந்திரன் தன் குருவை அலட்சியம் செய்த பாவம் அகலுவதற்காக மதுரையை அடைந்து அங்கிருந்த சுயம்பு மூர்த்திக்கு விமானம் அமைத்து வழிபட்டு தன் பாவத்தைப் போக்கிக் கொண்டான். ஆண்டுதோறும் தேவேந்திரனே நேரில் வந்து சுந்தரேசுவரருக்கு இந்நாளில் பூஜை செய்வதாக ஐதீகம். அந்தப் புண்ணிய தினத்தில் அன்னதானம் செய்வது மிகச்சிறந்தது என்றும் கூறுவர்.

★ திருமலைநாயக்க மன்னரால் முதல் முதலில் துவக்கப்பட்ட சித்திரைத் திருவிழா கோலாகலமாக மதுரையில் இன்றும் நடைபெற்று வருகிறது. மீனாட்சி–சொக்கநாதர் திருக்கல்யாணம் அடுத்து தேரோட்டம். அதைப் பார்க்கத் தங்க குதிரை வாகனத்தில் பளபளப்புடன் வரும் கள்ளழகர். அவரை எதிர்கொண்டு அழைக்கிற எதிர்சேவை சந்தோஷங்கள். மறுநாள், மக்கள் கூட்டத்தை விலக்கிக் கொண்டு வைகை ஆற்றில் கள்ளழகர் இறங்கும்போது 'கோவிந்தா' முழக்கங்களுடன் எங்கும் பக்தி பரவசம், பிறகு தசாவதார அலங்கார தரிசனம், பூப்பல்லக்கு என்று முடிந்து அழகர் திரும்பி அழகர் கோவிலுக்கு போகும்போது மதுரையிலிருந்து ஒரு கூட்டமே போய் வழியனுப்பி விட்டு வர, இந்த குதூகலத்தை காண்பதற்காகவே சித்திரை திருவிழாக் காலத்தில் வெளிமாநிலங்களில் இருந்து பக்தர்கள் மதுரைக்கு வருவார்கள்.

# இயற்கை வைத்யம்



## தனியா

சமையலில் தினமும் தனியா சேர்க்காமல் சாப்பிடுபவர்கள் இருக்க முடியாது. கொத்துமல்லி விதையைத்தான் தனியா என்கிறோம். தனியாவின் மருத்துவத் தன்மை தனிச்சிறப்பு வாய்ந்தது. உடலை சமநிலைப்படுத்தும். வாத, பித்த, கபத்தின் நிலைகளை சீர்ப்படுத்துவதில் தனியாவின் பங்கு அதிகம். இது நறுமணத்தையும் சுவையையும் தருவதோடு சீரண சக்தியையும் தூண்டுகிறது. வாயு மட்டுமல்லாது சளி, இருமல், மைக்ரேன் தலைவலி, இரத்தக் கொதிப்பு, சர்க்கரை, பித்தக் கிறுகிறுப்பு, சிறுநீரக பாதை நோய்கள் முதலான பல நோய்களில் மல்லி சித்த ஆயுர்வேத மருந்துகளில் இன்றளவும் பயன்படுகிறது.

நாம் எத்தகைய கடினமான அதாவது எளிதில் சீரணமாகாத உணவுகளை சாப்பிட்டாலும் அதனுடன் மல்லி விதை பொடியையும் சேர்த்துக்கொண்டால் உணவு எளிதில் சீரணமாகும்.

மல்லி விதையை வாயில் வைத்து மெதுவாக மென்று உமிழ்நீரை இறக்கினால் வாய் துர்நாற்றம் நீங்கும்.

தேநீரில் தயாரிக்கையில் தேயிலையுடன், தனியா சுக்கு லேசாக சேர்த்து தேநீர் தயாரித்தால் அது வயோதிக மலச்சிக்கலை நீக்கிட உதவிடும். சாப்பிட்டாலும் ஒரு சிலருக்கு என்னதான் பழம், தண்ணீர் சாப்பிட்டாலும் குடல் தசைகள் தொய்வாகிவிடுவதால் மலம் சிக்கலுடனேயே கழியும். 'தனியா தேநீர்' வயோதிகத்தில் குடலின் தசையியக்கத்தைத் தூண்டி இத்துன்பம் தணிக்கும்.

இதயம் பலப்பட அடிக்கடி உணவில் மல்லியைச் சேர்த்துக்கொள்வது அவசியம்.

சிலருக்கு சிறிது சாப்பிட்டாலும் செரிமானம் ஆகாமல் புளித்த ஏப்பம் வந்தால் தனியாவுடன் சிறிது சோம்பு சேர்த்து வாயில் போட்டு மென்று சாறு இறக்கினால் சில நிமிடங்களில் நிவாரணம் கிடைக்கும்.

கண்கள் பலப்படவும் கண்சோர்வு நீங்கவும் மல்லி விதையை நீரில் இட்டு கொதிக்க வைத்து ஆறியபின் அந்த நீரில் கண்களை கழுவி வந்தால் கண்கள் புத்துணர்வு பெறும்.

பித்த தலைவலி நீங்க சந்தனத்துடன் மல்லியை அரைத்து பற்றுபோட்டால் பித்தம் தணிந்து தலைவலி குணமாகும்.

ஜலதோஷத்தினால் வரும் தலைவலி நீங்க, மல்லி விதையை அரைத்து நெற்றியில் பற்று போட்டால் கபால சூலைநீர் நீங்கி தலைவலி, மூக்கடைப்பு குணமாகும்.

கொத்தமல்லி விதை, சந்தனம், நெல்லி வற்றல் இவற்றை நீரில் நன்றாக ஊறவைத்து வடிகட்டி அந்த நீரை அருந்தி வந்தால் தலைச்சுற்றல், கிறுகிறுப்பு குறையும்.

சுக்கு மல்லி இவற்றை சம அளவு எடுத்து இடித்து வைத்துக் கொண்டு, ஒரு கப் தண்ணீரில் 1 ஸ்பூன் பொடியைப் போட்டு கஷாயம் போல் செய்து அதனுடன் பனைவெல்லம் சேர்த்து மாலை வேளையில் அருந்தி வந்தால் பித்தம் நீங்கி, அதனால் வரும் மற்ற துன்பங்களும் நீங்கும்.

மல்லி விதையை நன்றாக நீர்விட்டு அரைத்து நாள்பட்ட புண்கள் மீது பற்று போட்டால் புண்கள் விரைவில் ஆறும்.

வயிறு மட்டுமல்லாது கரப்பான், காளாஞ்சகப்படை முதலான பல தோல் நோய்கட்குமே இந்த தனியா விதையில் இருந்து எடுக்கப்படும் எண்ணெய் பயனளிப்பதை ஆய்வு முடிவுகள் உறுதிப்படுத்தியுள்ளன. இன்னும் கொத்துமல்லி விதை சர்க்கரையை கட்டுப்படுத்துவதிலும் நல்ல கொலஸ்ட்ராலைக் கூட்டுவதிலும் மிகுந்த பயன் தரும் ஒன்று.

# கணபதி புராணம்

பேராசிரியர் ராஜ. பார்த்தஸாரதி

சென்ற இதழ் தொடர்ச்சி



"**தே**வாதிதேவனே ! ஆற்றிலே இருக்கிற மணலை எண்ணிலாலும் எண்ணலாம், உம்முடைய உந்தியிலே இருக்கிற ப்ரம்மாண்டங்களை எண்ண முடியாது. எனக்கு இந்த ப்ரம்மாண்டத்தை விட்டு வெளிவருவதற்குத் தடம் தெரியாமல் இருக்கிறேன். என்னைக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறபோதே, விஷ்ணுவும், ருத்ரனும், ப்ரம்மாவைப் போலவே விக்னேஸ்வரருடைய உந்திக் கமலத்திலே போய்ச் சுற்றி, ப்ரம்மா இருக்கிற இடம் வந்து சேர்ந்தார்கள். மூன்று பேரையும் விக்னேஸ்வரர், அவர் காதின் வழியாக வெளியே வரும்படிச் செய்தார்" என்று ப்ருகு மஹரிஷி சொல்லவும். சோமகாந்த ராஜா இன்னும் கேட்டான், "மஹரிஷியே மஹரிஷியே அதன்பின் ப்ரம்மாவானவர் ச்ருஷ்டியை எவ்வாறு செய்தார் என்று கேட்கவும், ப்ருகு மஹரிஷி சொல்லத் தொடங்கினார்.

### 7. விக்ன புருஷர்கள் ப்ரம்மாவை அடித்த அத்தியாயம்

சோமகாந்த ராஜாவே ! அந்த ப்ரம்மாவானவர் வேத, சாஸ்திர புராணங்களெல்லாம் படித்து ஞான விக்யானத்துடன் கூடி சாபானுக்ரஹ சாமர்த்யத்தையும் அடைந்து, இந்த சிருஷ்டி செய்வது என்பது பெரியதொரு காரியம் தனக்கில்லை என்று கருவத்தை அடைந்தார். அதைப் பார்த்து விக்ன புருஷர்கள் எனப்படும் விக்னேஸ்வரருடைய கணங்கள் ப்ரம்மாவைச் சுற்றிக் கொண்டார்கள். அவர்கள் எப்படிப்பட்டவர்களென்றால், சிலர் மூன்று கண்களை உடையவர்கள், சிலர் ஐந்து கண்களை உடையவர்கள், சிலபேருக்கு யானைத் தலைகளும், சிலருக்கு ஏழு கைகளும், ஆறுகாலும் ஐந்து மூக்குகளும் உடையவர்கள். சிலர் ஏழு மூக்கும் பத்துத் தலையும், ஐந்து கால்களும், பருத்த உதடுகளும், ஓனாய் வயிறுமுடையவர்கள். இப்படி நானாவித ரூபங்களாய் கணக்கில்லாமல் இருக்கிற விக்ன புருஷர்கள்

தாமரைக் குளத்தை வண்டுகள் சூழ்ந்தாற்போல ப்ரம்மாவைச் சுற்றிக் கொண்டு, அட்டஹாசம் பண்ணி, சிறிது நேரத்திற்குப் பிறகு அடிக்கத் தொடங்கினார்கள். முழங்கால்களினாலே இடித்தும், நான்கு குடுமியையும் பிடித்திழுத்தும், நான்கு முகத்தை உடைத்தும், இவ்வாறு உபத்திரம் பண்ணுவார்கள். சிலர் அடிக்க வேண்டாமென்று விடுவிப்பார்கள். சிலர் பிடித்துத் திரும்பவும் கட்டுவார்கள். என் பக்கம் வா, உன் பக்கம் வாவென்று நாலு திசையிலும் கையைப் பிடித்து இழுப்பார்கள். அழுகாதே மகனே என்று சிலர் கட்டி முத்தம் கொடுப்பார்கள்.

இவ்வாறு ப்ரம்மாவானவர் வெகு துக்கப்பட்டு, அடிபட்டு மூர்ச்சை அடைந்தார். பிறகு, மூர்ச்சை தெளியவும், அந்த விக்ன புருஷர்களைத் தெண்டனிட்டு, விக்னேஸ்வரர் தயை செய்து அருள் செய்யும் நிமித்தமாய் ஸ்தோத்திரம் செய்தார்.

(தொடரும்)

## சித்திரை மாத சிறப்புகள்

★ சித்திரை மாத சுக்ல பட்ச பஞ்சமியில் லட்சுமி தேவி வைகுண்ட லோகத்திலிருந்து பூமிக்கு வந்ததாகப் புராணம் சொல்வதால் அன்று லட்சுமி பூஜை செய்தால் செல்வச் செழிப்பு ஏற்படும். சித்திரை மாத சுக்ல அஷ்டமியில் அம்பிகை பிறந்ததாகக் கூறப்படுகிறது. அன்று புனித நதிகளில் நீராடுவது சிறப்பாகச் சொல்லப்படுகிறது.

★ காஞ்சிபுரத்தில் உள்ள சித்திர குப்தன் ஆலயத்தில் சித்திரா பவுர்ணமி அன்று சித்திரகுப்தனுக்கு காலையில் அபிஷேகமும், மாலையில் திருக்கல்யாணமும் நடைபெறுகிறது. சித்திரா பவுர்ணமி அன்று இங்கு வந்து இந்திரன் வழிபடுவதாக ஐதீகம்.

★ கோவை சிங்காநல்லூரில், சித்திரகுப்தருடன் எமதருமன் சேர்ந்து அருளும் தனிக்கோயில் உள்ளது. இங்கே, சித்ரா பௌர்ணமியன்று 101 வகை படையல்கள் படைத்து, பொங்கலிட்டு வெகுச் சிறப்பாக வழிபாடுகள் நிகழும். வராத கடன்பாக்கி வந்துசேரவும், மரண பயம் நீங்கவும் பக்தர்கள் இங்கு வந்து வேண்டி பலனடைகிறார்கள்.

# ஆத்ம த்ருப்தி

**தேதியூர் வி.ஜே. ராமன்** - ஆத்மார்த்த ஜோதிடர்

பிரசித்தி பெற்ற கோயில் ஒன்றை உருவாக்க பல ஸ்தபதிகள் அந்தத் தொழில் கூடத்தில் வேலை செய்து கொண்டு இருந்தார்கள். தலைமை ஸ்தபதி அந்தக் கோயிலின் ப்ரதான தெய்வத்தின் சிலை ஒன்றினை உருவாக்கிக் கொண்டு இருந்தார்.

ஜெர்மனியில் இருந்து வந்த ஒருவர் தலைமை சிற்பி செதுக்கும் அழகை ரஸித்துக் கொண்டிருந்தார். சட்டென்று தனது கண்ணோட்டத்தை திருப்பிய அவருக்கு அதே சிலை ஏற்கெனவே செய்யப்பட்டு கீழே கிடத்தப்பட்டுள்ளது தென்பட்டது.

'ஒரே உருவம் உள்ள இரு தெய்வச் சிலைகளை இந்தக் கோயிலில் நிர்மாணிக்கப் போகிறீர்களா. . .' கேட்டார் அந்த ஜெர்மானியர்.

'இல்லை. . . இல்லை. . . ஒரு தெய்வச் சிலைதான் வேண்டும். ஏற்கெனவே செய்யப்பட்டுள்ள அந்தச் சிலை சிறிது பின்னம் அடைந்துவிட்டது'. சொன்னார் ஸ்தபதி.

செய்யப்பட்ட சிலையை நன்கு உன்னிப்பாக பலமுறை பார்த்த அந்த ஜெர்மானியர் சொன்னார், 'என் கண்ணுக்கு எந்த பின்னமும் தென்படவில்லையே. . .' எங்கே பின்னம் உள்ளது என்று காண்பிக்க முடியுமா. . ?' 'சிலையின் மூக்கின்மேல் மயிர் இழையில் ஒரு கோடு வந்து உள்ளது. சராசரி மனிதர் கண்களுக்கு அது புலப்படாது. . .' சொன்னார் ஸ்தபதி.

'இந்தச் சிலையை எங்கு வைப்பதாக உள்ளீர்கள். . .?'

'இருபது அடி உயரம் உள்ள ஒரு ஸ்தூபியின் மேல் இந்தச் சிலையை நிர்மானம் செய்ய உள்ளோம். . . '.

'இருபது அடி உயரத்தில் இந்த சிலையின் மூக்கின் மேல் உள்ள சிறிதும் தெரியாத இந்த கீறலை எவரால் கண்டுபிடிக்க இயலும். . ? உங்கள் நேரத்தை வீணடித்துக் கொண்டு புதிய சிலையைச் செய்கிறீர்களே. . .' சொன்னார் ஜெர்மானியர்.

அவரை மேலும் கீழும் ஒருமுறை பார்த்த அந்த ஸ்தபதி சொன்னார், 'எனக்குத் தெரியுமே. . . ஏனோ தானோ என்று என்னால் ஒரு காரியத்தைச் செய்ய இயலாது. . . அப்படியானால் நானே என்னை ஏமாற்றிக் கொள்பவன் ஆவேன். . . ஆத்ம த்ருப்தி என்பது நீங்கள் எனக்குச் சொல்லும் புகழ்ச்சியால் வருவதில்லை. நீங்களோ. . . எவரோ என்னைப் புகழவேண்டும் என்று சொன்னாலும் நான் திளைப்பதும் இல்லை. . . ஆத்ம த்ருப்தி என்பது என்றுமே இருக்காது.

மலை ஏறுபவன் என்றுமே உலகம் தன்னைத் திரும்பிப் பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தோடு ஏறக்கூடாது. உலகத்தின் அழகு என் முன்னால் எப்படி இருக்கும் என்ற ஆத்ம சிந்தனையுடனேதான் இருக்க வேண்டும்.

## சித்திரை மாத சிறப்புகள்

★ குமரி மாவட்டத்தில் சுசீந்திரம் தாணுமாலயன்சாமி கோவிலில் (மும்மூர்த்திகள் தாணு+மால்+அயன்) தேர்த் திருவிழா புனிதமானது. பிரசித்தமானது. புதிதாக திருமணம் செய்து கொண்ட தம்பதியர்கள் தம் திருமண வாழ்க்கையில் முதன்முதலில் சித்திரைத்தேர் காண வேண்டும் என்ற சம்பிரதாயம் உள்ளது. இதனால் வாழ்க்கை இனிதே அமையும் என்பது நம்பிக்கை. சித்திரகுப்தன் நினைவாக சோழர்கள் காஞ்சிபுரத்தில் உள்ள சித்திரகுப்தன் ஆலயத்தில் அன்னதானம் செய்வது வழக்கம். அவர்கன் சித்திரா பவுர்ணமியை சிறப்பாகக் கொண்டாடி வந்தார்கள். இந்த செய்திகளை திருச்சி மலைக்கோட்டையில் உள்ள கல்வெட்டுகளில் காணலாம்.

★ கோவை–பாலக்காடு சாலையில் உள்ள நவக்கரை எனும் ஊரில் உள்ள துர்க்கா பகவதி அம்மன் கோயிலில் ஒவ்வொரு ஆண்டும் சித்திரை பவுர்ணமியை ஒட்டி மூன்று நாட்கள் திருவிழா நடை பெறுகிறது. அன்று பூஜையின் போது, மலர் அலங்காரத்துடன் கோயிலைச் சுற்றி உலா வருவார் பகவதி அம்மன். மன நோயாளிகளுக்கு சிறப்பு வழிபாடு நடத்தப்படுகிறது. பில்லி சூன்ய பாதிப்புகள் இங்குள்ள நந்தி கோயிலுக்கு வந்தால் பறந்தோடி விடும் என்பது நம்பிக்கை.

# சிந்திப்போம் சில நொடிகள்

பானுமதி பத்மநாபன்

சென்ற இதழ் தொடர்ச்சி

**அ**டுத்து **''மலர்க் கமலை துதிக்கின்ற மின்கொடி''** என்கிறாரே! செவ்வண்ணப் பொருட்களை உவமித்து வந்த பட்டருக்கு செந்தாமரை மலர் மேல் செம்பட்டு உடுத்தி வீற்றிருக்கும் செங்கமலவல்லியாம் திருமகள் அன்னையைத் துதித்துக்கொண்டிருப்பது தெரிந்ததோ!

**ஸசாமர ரமா வாணீ ஸவ்யதர்க்ஷிண சேவிதா** -614

என்ற லலிதா ஸஹஸ்ர நாமக் காட்சி தோன்றியிருக்க வேண்டும்! இவ்வாறு துதித்துக்கொண்டிருக்கும் திருமகளுக்கு அன்னையின் தரிசனம் ஒரு மின்னல் கொடி போன்று ஒரே நொடி கிட்டியதாம் இதனையே பகவத்பாதரும் உறுதி செய்வதைப் பாருங்கள்!

**''தடில்லேகா தன்வீம் தபனசசி வைச்வானர மயீம்''** (21)

மின்னல்கொடி போன்றஒளிவடிவு கொண்டவளும், கதிரவன், சந்திரன் மற்றும் அக்னியில் ஒளியாக ப்ரகாசிப்பவளும்' என்று இவரும் கூறுகின்றார்.

சிவந்த ஒளி மிக்கதும் மென்மையானதையும் சொல்லபுகுந்து மாதுளம்போதினைக் கூறியபட்டருக்கு இவைகளோடு மணம் மிக்கதுமான ஓர் சிவந்த பொருளை அன்னைக்கு உவமிக்கும் எண்ணம் தோன்றியிருக்க வேண்டும் எனவே

**''மென்கடிக் குங்குமத் தோயம்''**

என அடுத்துப் பாடுகிறார். மென்மையும்,சிவந்த வண்ணமும், மணமும் மிகுந்த குங்குமப்பூ இவரின் நினைவிற்கு வந்தது. இனி இந்த 'மென்கடிக் குங்குமத்தினை என்ன செய்யலாம்' இதோ பெரிய பாத்திரத்தில் நன்நீர் கொண்டுவந்து நிரப்பி அதில் இந்த குங்குமப் பூவினை நிறயக் கொட்டிக் கலந்ததும் மணமிக்க செவ்வண்ண நீர் கிடைத்து விட்டதே! இந்த குங்குமப் பூ நீரைக் கொண்டு அந்த குங்குமக்காரிக்கு அபிஷேகம் செய்தால் ஆஹா!எத்தனை அழகு! ஏற்கெனவே சிவந்த திருமேனியில் இச்செவ்வண்ண நீர்



பரவிச்செல்லும் போது மேலும் சிவந்து சொல்லொணா அழகோடு காட்சியளிப்பதை எவ்வாறு வர்ணிப்பது!

**''செம்பவளத் திருமேனிச் சிறுமியை நம்பி என்னுள்ளே நயந்து வைத்தேனே''** என்கிறது திரு மந்திரம்

அடைக்கலம் கோரி வந்த பட்டர் அம்மையின் அழகெல்லாம் சொல்ல நினைத்து ஒவ்வொன்றாய் உவமித்த அழகினைப் பார்த்தோம். நாள்தோறும் அன்னையைப் பூசிக்கும் அபிராமி பட்டர் அவளிடம் விண்ணப்பம் ஒன்று வைத்து முதல் பாடலை நிறைவு செய்கிறார். ஆம்!

**''அபிராமி எந்தன் விழுத்துணையே''**

என்பது விண்ணப்பம். எனது மேலான துணையாக எங்கும், எப்போதும், எவ்விடத்தும் நீ இருக்க வேண்டும் எனக் கேட்கிறார்.

துணை என்று மட்டும் அல்லாது விழுத்துணை என்று கூறிய காரணம் யாதாயிருக்கும்?

(தொடரும்)

## சித்திரை மாத சிறப்புகள்

★ கும்பகோணம் ஸ்ரீஆதிகும்பேஸ்வரரும் ஸ்ரீமங்களாம்பிகையும், சித்திரை மாதம் நடைபெறும் சப்தஸ்தான விழாவுக்காக பல்லக்கில் புறப்பட்டு, சுமார் 20 கி.மீ தூரம் பயணித்து... சாக்கோட்டை, திருக்கலயநல்லூர், தாராசுரம், திருவலஞ்சுழி, சுவாமிமலை, கொட்டையூர், மேலக்காவேரி ஆகிய ஏழு திருத்தலங்களுக்கும் சென்று திரும்புகிறார்கள். மிக அற்புதமான விழா வைபவம் இது!

★ கன்னியாகுமரி மாவட்ட ஆலயங்களில் சித்திரகுப்த பூஜை சிறப்பாகக் கொண்டாடுவார்கள். இந்த மாவட்டத்தில், வீர நாராயணமங்கலம் என்ற ஊரில் கோயில் கொண்டிருக்கிறாள் ஸ்ரீமுத்தாரம்மன். இவளது ஆலயத்தில், உடற்சூடு தணிக்கும் காய்கனிகள், எலுமிச்சை, சர்க்கரை, சுக்கு கலந்த பானம் செய்து அம்மனுக்குப் படைத்து வழிபடுகிறார்கள். பிறகு பக்தர்களுக்குப் பிரசாதமாகவும் விநியோகிப்பர்.

# வாசகர்களின் எண்ணங்களிலிருந்து...

'ஸ்ரீவித்யாம்ருதம்' மிக நன்றாக இருந்தது. குறிப்பாக கடவுளை மறுத்தவனை நோக்கி எப்படி உன்னால் வெற்றி பெற முடிந்தது என கேட்க, அதுவும் கடவுள் அருள்தான் என்ற பதில் உச்சம். சிந்திக்க வைத்து, சிரிப்பையும் வரவழைத்தது. முக்கியமான அந்தப் பகுதியை பெரிய எழுத்துக்களில் வழங்கி வரும் விதம் அருமையானது. மஹாஸ்வாமிகளின் அருளமுதம் எங்கும் 'ஸ்ரீவித்யா' மூலம் ஒலிக்கட்டும். நல்வாழ்த்துக்கள்.

- **நலந்தா ஜம்புலிங்கம்**, தேவகோட்டை.

'ஸ்ரீவித்யா' பத்தாம் ஆண்டு பூர்த்திவிழா அழைப்பிதழ் கண்டேன். ஆனந்தமாய் இருந்தது. ஆன்மீக உலகின் நல்ல பல இதழ்களில் 'ஸ்ரீவித்யா' மணிமகுடமாய் விளங்குகிறது. பத்தாம் ஆண்டு விழா சிறக்கட்டும். பலநூறு ஆண்டு விழாக்கள் குருநாதர் பேரருளால் கண்டு உலகமெலாம் அத்வைத நெறி பரவட்டும்.

- **ஸ்ரீமதி அமுதா வெங்கட்**, பெங்களூரு.

ஸ்ரீஸ்வாமி ஓங்காராநந்தர் அவர்களின் 'அத்வைத மகரந்தம்' அத்வைத நெறியினை மிக எளிமையாக விளக்குகிறது. சம்ஸ்கிருதம், தமிழ் இரண்டிலும் மிகத் தேர்ந்த சுவாமியின் படைப்பினை வெளியிடும் 'ஸ்ரீவித்யா'விற்கு மிக்க நன்றி.

- **சுந்தரேசன்**, மந்தைவெளி, சென்னை.

பெரும்பாலான மக்களுக்கு நவராத்ரி என்றால் அது புரட்டாசி மாதம் வரும் நவராத்ரி என்றே தெரியும். ஆனால், 'வசந்த நவராத்ரி' பற்றியும், அதன் பெருமைகள் பற்றியும், அதன் புராண வரலாறு குறித்தும், 'ஸ்ரீவித்யா' மூலம் அறிந்து கொண்டோம். பயனுள்ள தகவல்களை வழங்கும் 'ஸ்ரீவித்யா' உலகமெங்கும் பரவட்டும்.

- **ஸ்ரீமதி மாதங்கி மங்களேஸ்வரன்**, மதுரை.

# ஆசாரம்

திருமதி அனுராதாகிருஷ்ணன்

சென்ற இதழ் தொடர்ச்சி

**ஸ**மாதி நிலை இரண்டு வகைகளில் ஏற்படும். ஸவிகல்ப ஸமாதி, நிர்விகல்ப ஸமாதி என்று வகைப்படுத்தப் பட்டிருக்கிறது. நிர்விகல்ப ஸமாதியை ஜட ஸமாதி என்றும் கூறுவர். நிர்விகல்ப ஸமாதியில்தான், தனது என்கிற எந்த உணர்வும் இல்லாமல் ஜடம் மாதிரி இருப்பதால் அதை ஜட ஸமாதி என்று குறிப்பிடுவர். முதலில் ஸதாநந்தர் அருளிய வேதாந்த ஸாராவில் இந்நிலைகளைப் பற்றி கூறியிருப்பதைப் பார்ப்போம்.

"Absorption attended with self-consciousness (ஸவிகல்ப ஸமாதி) is that in that state, taking the form of Brahman, the one without second, rest on it, but without the merging of the distinction of knower, knowledge and the object of knowledge".

ஸவிகல்ப ஸமாதியில் தன்னுள் ப்ரம்மத்தை அடைந்து அதில் திளைத்து, ஆனந்தித்து, ஆனால் ப்ரம்மத்துடன் ஒன்றாக கலக்காமல் அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்று தான் வேறு ப்ரம்மம் வேறு என்று உணர்ந்த நிலை.

"Absorption without self-consciousness (நிர்விகல்ப ஸமாதி) is the total mergence in Brahman, the one without the second, of the mental stage which has assumed its form, the distinction of knower, knowledge and the object of knowledge being in the case abliterated".

நிர்விகல்ப ஸமாதியில் மனம், புத்தி, அந்தக்கரணம் எல்லாம் அந்தப் பரம்மத்துடன் ஒன்றி, அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்று யாவும் ஒழிந்தவனாய் தன்னை வேறாக அறியப் படாமல் ப்ரம்மத்துடன் ஒன்றாய் லயம் அடைந்துவிடும் நிலை. இதுதவிர, 3-வது நிலையை சிலர் விவரிக்கின்றனர். இது த்வைத அத்வைத நிலைக்கு அப்பால் த்வைதா அத்வைத விவர்ஜிதா என்கிறார்கள். இங்கு ஒன்றாகவும், பலவாகவும் இருக்கும் பொருளுக்கும் மேலானதான ஒன்று.

ஸவிகல்ப ஸமாதியில் சாதகன் அவனுடைய இஷ்ட தெய்வத்தை உணர்கிறார். அதிலேயே லயித்து ஆனந்தம் அனுபவித்து உலகை

மறந்திருக்கும் நிலை. இந்த நிலையில் மனதில் உள்ள இஷ்ட தெய்வமும் தானுமாக த்வைத நிலையில் இருப்பது. இந்த நிலையில் சாதகன் தெய்வத்துடன் வெவ்வேறு உறவுகளில் தன்னை இணைத்து பக்தி கொள்கிறான். ப்ரம்மத்தை சாந்தஸ்வரூபியாகவும், தாசனாகவும், தோழனாகவும், தாயாகவும், பிள்ளையாகவும், தந்தையாகவும், காதலனாகவும் மனத்துக்கிசைந்த இனிய பாவத்தில் அந்த பரவச நிலையை அனுபவிக்கிறார்கள்.

கோபிகைகள் கண்ணனை ப்ரேம பாவத்தினாலும், ராமகிருஷ்ணர் தாயாகவும், அர்ச்சுனன் தோழனாகவும், ஆண்டாள் மணாளனாகவும், ராமதாஸர் தாஸராகவும், அப்பர், சம்பந்தர் முதலான நாயன்மார்கள் தந்தையாகவும் அந்தந்த நிலைகளில் அந்த ப்ரம்மானந்தத்தில் திளைத்தார்கள்.

பாரதி கண்ணனை தோழனாக, தாஸனாக, குழந்தையாக என்று பலவிதங்களில் அனுபவித்து இருப்பது அவர் இயற்றிய கவிதைகளின் மூலம் தெரிகிறது. ஆக இந்த த்வைத நிலையில் பக்தர்களுக்கு பரம ஆனந்தம் கிடைக்கிறது. இந்த நிலையில் இந்த ஆனந்த அனுபவத்திலேயே இருக்கவும் விரும்புகிறார்கள். அதனால் த்வைத நிலையிலிருந்து அத்வைதநிலை கிட்டுமானாலும் கூட அதை விரும்பாமல் ப்ரம்மானந்தத்தை வைத்து அந்த ஆனந்த அனுபவத்திலேயே திளைக்க ப்ரியப்படுகின்றனர்.

(தொடரும்)

வாசகர்கள் தங்கள் எண்ணங்களை கடிதம் மூலமாகவோ, ஈமெயில் மூலமாகவோ கீழ்க்காணும் முகவரியில் பகிர்ந்து கொள்ளலாம்.

**- ஆசிரியர்**

**திரு. M.K. முரளீதரன்**

**'ஸ்ரீவித்யா' உதவி ஆசிரியர்** - 9444078880

3/2, **பத்மநாபன் தெரு, வில்லிவாக்கம், சென்னை** - 600 049.

E-mail : mechari.murali@yahoo.com

கடிதம் எழுத, அனுப்ப இயலாதவர்கள் அலைபேசி மூலமாகவும் தங்கள் கருத்துக்களைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தொடர்பிற்கு : **ஆசிரியர்** - 9486965655

## பதவித்யா - புதிர் 19

காலியான கட்டங்களில் கீழே கொடுக்கப்பட்டுள்ள கேள்விக்கான பதிலை நிரப்பிய பின் கட்டங்களில் இடம் மாறியுள்ள எழுத்துக்களை கொண்டு சரியான சொற்களை கண்டு பிடிக்கவும்.

### புதிர் - A

**கேள்வி - நடராஜரின் சித்சபை உள்ள ஊர்**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | வ | ஞ் | ழி | ல | ரு | சு |
| ண | | ன் | ம | க | ரா | யா |
| ப | ய | | நெ | ர் | ப் | ல் |
| பு | ன் | சை | | ர | த | பி |
| ள் | ப | பா | க | | கா | ற் |
| மை | ன் | அ | ப் | ம் | | ய |
| ர | பூ | னு | ந் | க | த | |

### புதிர் - B

கீழே கொடுக்கப்பட்டுள்ள கேள்விகளுக்கான பதிலை கட்டங்களில் பூர்த்தி செய்து அதிலுள்ள எழுத்துக்களை கொண்டு குறைந்தது பத்து வார்த்தைகளை கண்டு பிடிக்கவும்

**கேள்வி - சித்திரையில் கொண்டாடும் நவராத்திரி**

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | த | | | ரா | | | ரி |

**வடிவாக்கம் - இந்திரா வைத்தியநாதன், வாஷி**

### பதில் - A

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தி | ரு | வ | ல | ஞ் | சு | ழி |
| க | ல் | யா | ண | ரா | ம | ன் |
| நெ | ல் | லை | ய | ப் | ப | ர் |
| சை | த | ன் | ய | பி | ர | பு |
| க | ற் | ப | கா | ம் | பா | ள் |
| அ | ம் | மை | ய | ப் | ப | ன் |
| க | ந் | த | ர | னு | பூ | தி |

### பதில் - B

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| வ | ச | ந் | த | ந | வ | ரா | த் | தி | ரி |

(1) வசந்தி (2) வதந்தி (3) சந்ததி (4) தந்திரி (5) ராத்திரி
(6) தந்தி (7) வத்தி (8) சந்தி (9) நந்தி (10) சந்திரன்
(11) வரி (12) சரி (13) திரி (14) நவராத்திரி

# ஸ்ரீவித்யா பஞ்சாங்கம்

## மே 2015

1. பக்ஷ ப்ரதோஷம்.
3. ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஜயந்தீ - மாலை 6 மணி ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ புஷ்ப ரதோத்ஸவம், ஸ்ரீக்ஷேத்ர ஶகடபுரம்.
3. ஸ்ரீ வேதவ்யாஸ ஜயந்தீ, ஸ்ரீ கூர்ம ஜயந்தீ.
4. பூர்ணிமா, ஜகத்குரு ஸ்ரீ சங்கரபகவத்பாதா குஹ ப்ரவேஸம்
6. ஸ்ரீநாரத ஜயந்தி
7. **ஸ்ரீ ஸங்கடஹர சதுர்த்தீ**
10. **ஸ்ரீராம பட்டாபிஷேகம்**
11. காளாஷ்டமீ, ஸ்ரீ தும்புர ஜயந்தீ
14. ஸர்வேஷாம் அபார ஏகாதஶீ.
15. பக்ஷ ப்ரதோஷம், வ்ருஷப ஸங்க்ராந்தி
16. மாஸ ஶிவராத்ரி.
17. தர்ஶ
18. ஸோமவதீ அமாவாஸ்யை, ஸ்ரீ ஶனைச்சர ஜயந்தீ
19. **பூர்வாராதனை - ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீவித்யாபீடாதீஶ்வர ஸ்ரீஸ்ரீ ராமச்சந்ரானந்த தீர்த்த மஹாஸ்வாமிகள், சந்த்ர தர்ஶனம்.**
20. **முக்ய ஆராதனை.**
21. உத்தர ஆராதனை, ஸ்ரீ விநாயக சதுர்த்தீ.
22. உமா அவதாரவ்ரதம்.
23. சித்ர ரத கந்தர்வ ஜயந்தீ
28. தாஶஹர வ்ரதம், கங்கா பூஜை, ஸ்ரீ யாக்ஞவல்க்ய ஜயந்தீ, ஸ்ரீ ராமேஶ்வர ஶிவலிங்க ப்ரதிஷ்டா தினம்.
29. ஸர்வேஷாம் நிர்ஜல ஏகாதஶீ.
30. ஸ்ரீ த்ரிவிக்ரம பூஜா, ஸ்ரீ சத்ரபதி சிவாஜி ராஜ்யாபிஷேக தினம்.
31. பக்ஷ ப்ரதோஷம்.

